நந்தனார்-அன்னீதஞ்செய்யே னென்றார்
வேதியர்-சொன்னாதுதவறே னென்றார்
நந்தனார்-எங்கள்ஜாதிக்குவென்னவழி யென்றார்
வேதியர் உங்கள்ஜாதிக்குஇந்தவழி யென்றார்
நந்தனார்-உற்றதாஐது மென்றார்
வேதியர்-பெற்றதப்போது மென்றார்
நந்தனார்-பறையனாய்ப்பிறந்ததென் தலையெழுத்து வென்றார்
வேதியர் மறையாய்ப்பிறந்துங்கள்வருத்தமது வென்றார்
நந்தனார்-வாய்க்காதவெனக்கு வழிசொல்லு வீரே
வேதியர்-காயக்காதமறந்திலை கல்லெறி யாரே
நந்தனார்-எப்போதுமிப்படிச்செய்யவோ னென்றார்
வேதியர்-அப்போதுமிப்படிச்செய்தகன் னென்றார்
நந்தனார்-உலகமனைத்துங் கடவுளாய்நின்ற தேன்
வேதியா-பலகலைகற்றமை பறையனாய்ப்பிறந் தேன
நந்தனார்-பழுதானஜென்மம் பறைக்கிதனே யென்றார்
வேதியர்-அழுதாலுமகன்மம்மடுக்காதே யென்றார்
நந்தனார்-காப்பதுன்பாரம் கட்டுவிடு யென்றார்
வேதியர்-நாற்பதுவேலிகைய நட்டுவிடு வென்றார்
நந்தனார்-அப்பன்கருணை இப்படியோ னென்றார்
வேதியர்-தப்பினேனதுவு மொப்பிலே னென்றார்

வசனம்.

அப்போது நந்தனார் மெத்தவும ஐயரை வணங்கி உத்தாரங் கேட்டார்.

விருத்தம்.

அல்லணைக்குழலாள்மோகமண்டாதவொருக்காற்றொண்டர்
பல்லுபாழிகாவஞ்செய்த பழவினைத்தொடக்கறுத்துச்
சொல்லினிமடங்கொண்டச் சுகக்கடலாட்டிவைக்குந
தில்லைநாயகனைக்கண்டு தெரிசனஞ்செய்வேனென்றார்.

கீர்த்தனம்-இராகம்-பியாகு-ஆதிதாளம்.

கண்ணிகள்.

மார்கழிமாதந்திருவாதிரைநாள் வரப்போகுதையே
மனைதப்பிடித்துப்பண்ணையொருதரம் போய்வாவென்றுசொல்லையே
கட்டையிருக்கையில்சிதம்பரம்போயே காணவேணுமையே
கடனுகிலுமாசைவினையுந்துன காலுக்குக்குவிலங்கையே

காலின்கசமுளைக்க நான்முதலாயுக் கடுமைக்காரனையே
காலபாசத்தில் காட்டிக்கொடாமல் காப்பாற்றிடுமையே
உள்ளங்காலில் வெள்ளெலும்பாட வோடியுழைத்தேனையே
உண்டதுமுறங்கின தன்றியில்வேறே யொன்றுங்காணேனையே
எட்டுமிரண்டு மறியாதபேதை யெளியேனையே
இன்னந்தாய் வயிற்றிடையணுகாம லிடங்காட்டிடுமையே
வெள்ளைவெளுத்திடுந் தண்ணீர்குடித்திடும் வெறியேயனையே
மேதினியினில் நாயினுங்கடையேன் வழிவிடவேணுமையே
தானந்தலங்களொன்றுங்காணா தடியேனானையே
தளரவிடவேண்டாமொருகோடி தருமமுண்டையே
அல்லும்பகலுங்க ளாதாரவாலே ஆளாகினானையே
அன்புடனேநல்லகதிபெறுவாயென் றனுப்பவேணுமையே

விருத்தம்

சிலையணிந்திடும்வேளெரிந்திடச் செய்திருந்திடுந்திருமேனியைக்
கலைந்தணிந்திடவேண்டுங்காதலைக் கண்டிலராகியமம்மதனைத்
தலைசுமந்திடுஞ்சேடனாத் தன்மைகொளுமநந்தனுரை
விலக்குவாக்கியபெருமையாலிவன் வேணதெல்லாம்பேசுவான்.

வசனம்

இப்படிச்சிதம்பரம்போக உத்தாரங்கேட்க நந்தனுருடைய சிவபத்தி யதிதாபத்தை ஆதிசேடனாலுஞ் சொல்ல வொண்ணாத மகிமை கொண்ட மகானுபாவனே தனக்கடிமைக்காரனென்று வேணபடி பேசுவார்.

கீர்த்தனம்-இ-ம்-முகாரி-ஆதிதாளம்.

மாடுதின்னும்புலையர்வுனக்கு மார்கழிதிருநாளோ
தேடியெடுத்தாயாரிடத்தேபோய் திண்டாதேபோடா
ஆடுதின்னும்புலையாவுனக்கு ஆனித்தெரிசனமோ
நாடுசிரிக்கும்வார்த்தைகளன்றோ நாடாதேபோடா
நண்டுக்குக்கலியாணவுளோ நரிக்குச்சங்கராந்தி
பண்டிக்குப்பூசைத்திருநாளுன்போல பறையாநீபோடா
பூசைகள்செய்வாயோ ஆண்டவன்பொன்னடிதொழுவாயோ
கூசல்போடாதேபோடா கூழைக்கும்பிடலாகாதேதா
கங்கையிலாடுவையோ ஆநந்தகாணிக்கைபோடுவையோ
இங்கிதமறிவேண்டிககடிவந்து இறையாதேபோடா
அஞ்செழுத்தோதுவையோ உனக்குமானந்தத்திருகூத்தோ
வஞ்சகவார்த்தைதானோக்குத் தெரியும்வாராதேபோடா

தில்லுந்திரியாவரப்பேச் | சேதுக்காகபிடிந்
திருக்குமெனதுபிடி | திருமபாதடாபகடி
பஞ்சைநியா | சமாந்து
பார்ப்பே | னெடடாகடி-ஆட்

வசனம்

வேதியர் சொற்களைக் கேட்ட நந்தனார் நீங்களென்னைத் தடியாலடித்தாலும் பிராணனைமடித்தாலும் கழுத்தைப் பிடித்தாலும் சிதம்பரத்தில் நடித்தானைக் காணாமலிருந்தேனென்று மறுத்துச்சொல்லவேதியருக்குக்கோபம்பிறந்துசொல்லுவார்.

தரு-இ-ம்-சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி

இனியுன்குற்றத்தைப் பொறுப்பேனோ
அணுவளவேனுஞ் சமமதிப்பேனோ

அநுபல்லவி.

தனியாம்வேதசாஸ்திரந் | தனையுணர்ந்தாலுஞ்சாதி
தன்புத்திபோகாதென்று | சரித்திரம்பொய்யலவிதி-இனி

சரணங்கள்

பலகாலமுப்பழமும் | பாலூட்டினாலும்பாம்பு
பழகாததற்குவெப்பாய்ப் | பகரலாகுமோமேடபு
தவம்விட்டப்புறம்போய்த் | தானசையாதடாவிடபு
தரையிற்கறந்தபாலுந் | தாவுமுழலைகைகாடபு-இனி

இடையிலிருக்குமிந்த | இடும்பன்கட்டபஞ்சரி
இலாகளலைாமலிதோ | இருப்போர்கள்சிறுநரி
நடையிலிருப்போன்மகா | நல்லவனுக்குநெறி
நாலுனைச்சேர்ப்பேனென்று | நம்பாதேபரிகரி-இனி

வசனம்

என்றுசொல்லியவேதியர்க்கு நந்தனார் மிகுந்ததாழ்மையோடுஞ்சொல்ல வேதியர்க்குக்கோபம்வந்து திருட்டுப்பயலைக்கொண்டு மூட்டுப்பயலே யென்று மறுபடியுஞ் சொல்லுகிறார்.

அல்லும்பகலுநானறிந்துமேதோ வாராமற்போனேன்
ஆசைகொண்டேன்திருவம்பலதரிசனம் மோசஞ்செய்யுதையே
பாவியெனைத்தொடர்ந்தடித்தாலுமென்ன பாழுவினை தீராதோ
பார்த்தவரில்போர்சொல்லாதவனன்றோ படைக்கதுபோதாதோ
சகர்கம்பொசித்திடுமறைச்சிலையமேவொரு மெய்காப்பொதுடைமையோ
சிதம்பரங்காண்டோடலாமோசாதியில சின்னவனெனவேறு
இன்னமுஞ்சிதம்பரம்போகவென்னது இலகுமேனவருநீபேறு
இம்மட்டுப்போதுமையேயுங்கள்தய விருந்தாலதுபோதும்

இவை-ஐஞ்சீரடியாகவந்த-விருத்தம்,

சேதிவந்தவன் வேதியன்சினத்தால்
காருகளாகதிடுந்சோலையின்றவன்கருத்தை
யருலாவிங்பாமனைற்றுன்ன மலைபூதுக்கி
நீராகியதங்கனும்படிச்செய்தான்,

வசனம்.

அக்கோயருக்குத் தலைவணங்கி பெரியதும்பிடுபோட்டு ஒருசோலையி லிருந்து சமாதிபண்ணிதன்னுடையசரீரத்தை இல்லையெளியிலே கலந்து க்கொள்வேனென்று வைராக்கியமட்டத்துடனே சேரியில் வாராமல் தானேயிருந்தார் தன்னுடைய துயர்களையெல்லாம் அம்பலவாணருக்கே ஒ ப்புவித்து சங்கைகொண்டாடுவார்.

விருத்தம்.

வேதியரிப்படிசொல்ல வெந்து மனம்வேறுகிவினையோவென்று
சாதியிலேபாவமதாகேனன்றோ பிறப்பித்தாய்சுவாமியென்னை
சோதனையேசெய்கின்று எவ்வுயிர்க்குமவ்வுயிராய்த்தோய்ந்திருக்கும்
ஆதிகுருவல்லவோநீ பார்ப்பானுக்குள்ளிருந்துமனுப்புவீரே.

கீர்த்தனம்-இ-ம்-சௌராஷ்டகம்-ஆதிதாளம்.

ஐயர்வுன்னருடக்கலம் பொய்யாகியதேகமடைக்கலம் ஐயா

அத்தாநான்வருவேனோ அம்பலத்தைப்பெருவேனோ
சதமேறயாகிலுங்காண்பேனோ சந்நிதிகாணுதென்செய்வேன் ஐயா

விருத்தம்.

தாறில்லாதவிப்பிறவியைத் தாகொடுத்தருளி
தூறுபட்டனைற்கிழக் குலமாகியித்துன்பம்
நீறுபட்டிடுமல்லவோ தில்லையினின்றால்
பேறுபெறுதிக்வே றெதற்குமொருபிசகோ

கீர்த்தனம்-௩௰-எதுகுலகாம்போதி-திரிபுடைதாளம்.

பல்லவி.

ஐயோதெய்வமேயிந்த வையர்க்கடிமையானேன்
செய்யாவினைசெய்தல்லவோ
உள்ளங்கரைந்துருகி உய்யும்படியாய்க்கேட்கில்
கள்ளக்குமாரனல்லவோ
ஆலைக்கரும்பதுபோலாச்சுதங்கமுழுதும்
வேலைக்கிடமுமில்லையே
கோவில்கும்பத்தைக்கண்டால் கோடிவினைகள்தீரும்
பாவிக்குக்கிடையாதுகாண்
தில்லையம்பலவாணா தெய்வப்புலையர்க்காக
கல்லாச்சமயலாச்சுதே
பொன்னம்பலவாயுன்னைப் போற்றும்வகையில்லாமல்
இன்னம்பிறவியேறுமோ
அன்னைதந்தையும்நீயென்றறிவொருகுருபர
உனசந்நிதிவரச்செய்வாயே

ஆறுசீரடியாசிரியவிருத்தம்.

அடிமுடியொன்றுமில்லா தம்பலத்தரசேயுன்பால்
கொடியனுன்வந்தாலென்ன குறையுமோவதனால்நீதி
நடலைசெய்பார்ப்பான்கையில் நடுங்கவோவிடுத்தாயென்றும்
படிமிசைவீழ்ந்தானடிப் பதறுவான்கதறுவானே.

கீர்த்தனம்-௩௰௧-லாவணி-யமுனாகல்யாணி

பல்லவி

செய்யுமுபாயமறியேனறியேன்
ஆதராசிவனே தில்லைச்சிவனே

பத்துவருடகாலமாகவந்து பார்ப்பானைக்கேட்டேன்
சித்தமிரங்கிபோய்வாவென்றொருநாலசொல்லக்காணேனையே
பாவிபுலையனாய்ப்பிறந்தேனே இந்தபாரினிலிருப்பேனோ,
ஆவிதவிக்குதேபொன்னம்பலவா வுன்னடிக்கமலங்காணேனையோ — செ

பல்லுமுளைச்சநாள்முதலாக இந்தப்பாடுபடுகேனே
தில்லைநாயகாகனகாவென்றுன்னைத் தேடும்வகைகாணேனையோ — செ

காற்பதுவேலிநிலமிருக்கிறது நடுகவேணுமென்றார்
கார்ப்பதாருக்களைபிடுங்குதாரென்று கடுத்தப்பேசக் கூடியேன் — செ

ஆறறிவேகுளத்திலேவிழுவேனென்று வைதப்பிடித்திழுக்கிறேன்
பார்த்தனிருக்கிருபைசெய்யாவிடற்பறையன்பாபம்வீண்படாகாதுசொன்னேன் -செய்

தில்லைச்சிதம்பரத்தைக்காணுவிடிவென்தேகந்தெளிந்து
சொல்லிவிட்டேன்பொன்னம்பலவாவுன் சொர்ணசபைக்குவருவேனோநான் செய்

விருத்தம்.

கடுகிவருந்தியும் பணிகலனாகவுங்கற்றைச்
சடிலமேவியபுராரியுனற்றரிக்கவுங்கூடுமோ
விடுவதில்லையுன்னருகி னிற்றொருவெங்கைக்
கொடியன்வந்ததென்னைதில்லையிற்குறையோ.

இதுவுமது-விருத்தம்.

மாவளர்தில்லைமாநகர்வீதியும்மதிலும்
கோயிலுந்திருக்கூட்டமுங்கண்டுகண்குளிரப்
பாவியாகினேன்காயத்தை யேதாக்குப்படைத்தே
றாவிதானிருந்தும்பரகதியடைந்திலனே.

ஆதிநாள்முதற்றவம்பெருமாமுனிக்காக
நாதமோங்கவேநடம்புரிந்திடுநாதன்
பாதம்போற்றியென்னேரமும்பாவியானந்தன்
ஏதந்தீரவேகனவிலுமீசனுமிருந்தார்,

வசனம்

இல்லைத்தலத்தைதக்காணாத ஜென்மமிருந்தாலென்ன போனாலென்ன வென்று நிச்சயம்பண்ணி மனதுருகிவாடும வேளையில் கொஞ்சம் நித்திரைபோகவேகண்டு அந்நித்திரையில் அம்பலத் தேவன்வந்து சொல்லுவார்,

கீர்த்தனம்-இ-ம்-எ துகுலகாம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

கனவினில்கண்டாரேநந்தனார் கனவினில்கண்டாரே

அநுபல்லவி

மனதிலேபபோதும் நெருந்தியடிபணியுங்
கனகசபேசனை கண்ணிறைகாணாமல்- கன

சரணங்கள்.

நீநடுங்கழனிகள் நானடச்சொன்னேன்
ஊனமில்லாடனுன் னுடையவன்களிகக
மானிடப்பிறவியி லுனைக்கிணையார்பத்தி
மானில்லையெனத்தில்லை நாதனும்வந்தனைக்க -கன
கங்குல்பகலாய்க் களித்தநின்னருளாற்
சங்கரனேயென்று சாருநன்னிலையால்
அங்கம்புளகித மாச்சுது அதனை
லிங்கேவந்தேனென்று நசனும்புகல- கன

விருத்தம்.

அறிவுமிருந்தாற்றலுடன் சிவபெருமான்பெயர்சொல்லி யாற்றுநாளில், கருமருவுமிடறழகன் ரனதடிமைவெறியகக்கனவில்வந்து குறையறமேல் கழனிகளைநடச்சொன்னேமுனக்குவிடை கொடுத்தேனென்ற மறையோர் துறவர்க்குறைதந்து நீவிரைந்துவாவென்றுமனதுட்சென்றார்.

நந்தனார்கனவில் நடேசமூர்த்திசொன்னவசனம்.

நம்முடையநந்தனரே உன்னிடகழனிகளை நமதுபூதகணங்களாலே நடச்சொன்னோம் வேதியருக்குக்காட்டினால் உத்தாரங் கொடுப்பானென் றுசொல்லி தானம்பலத்தேசென்றார்.

கண்ணிகள்.

களையடாயல்சலம்விடாமல் கதிரொருமுழங்காணுமாம்
களிக்குதுபயிரிருக்குது அதைக் கட்டுகட்டவேதோணும்

ஊணுறாக்கமேயின்பம் ஊனிருந்தாலேதுன்பம்
சாணவயிற்றுக்குஆப்பு சாதிமுறைமையப்பு
ஒமேகாபலேவபலே சபாசுகண்டுகொண்டாய நந்

கேதாரகௌளம்.

ஞகாடிகோற்றவன்போல் வாதாட்டிநிற்பவாக்கு
வேதாந்தசாஸ்திரங்கள் காதாலேகேட்டிருந்து
என்னகாரியம்அதில்என்னவீரியம் தன்னுதன்னு நந்

புன்னாகவராளி.

இல்லையென்பதுகாட்டிலுண்டு கேட்டதில்லையா
தேகம்பட்டாற்புண்ணாகிப் பார்த இல்லையா
அம்பலமாவதுஆகாச முற்றப்பாறு
அருளில்லைபொருளில்லை கண்டுசேரு
பக்தியென்றும்சித்தியென்றும் வற்றியென்றுமுத்தியென்றும்
இத்தனைநான்கற்றகலை அத்தனையும்பித்தமாச்சு
மாறுபாட்டுக்காரன்வார்த்தை கூறப்போமோ
தாறுமாறுபேசினதால் சோறுபோடுமோ நந்

நாதநாமக்கிரியை.

எல்லாமுழுப்புரட்டு வல்லான்வகுத்தவழி
சொல்லாதேகம்மா நில்லாதோ
காரியத்தைப்பாரடா உனக்கிணையாரடா
காசுபணஞ்சேரடா இதுநல்லவூரடா நந்

மாஞ்சை

கஞ்சுகூழுகுடித்தாலும் பஞ்சமில்லையே
கொஞ்சமிருந்தாலும் சஞ்சலமென்ன நந்

மத்தியமாவதி.

சம்பாநெல்கிடக்குதுனக்குத்தாரேன் ஒற்றைச்
சல்லாகிழிச்சுனக்குத்தாரேன் ஒற்றைச்
சண்டாங்கிச்சேலையொன்று துண்டாய்க்கிடக்குதுந்தன்
பெண்டாட்டிக்குக்கொடுத்து நன்றாய்சுகமாயிரு நந்

புன்னாகவராளி.

நட்டுவெட்டுபாக்குதின்று தண்டைவெட்டிபார்த்தையா
கண்டாணடிக்கட்டளையில் மூண்டிருக்குபார்த்தையா நந்

மோகனம்.

தாரணியில்லாதவனொரு மாணியில்லாதவன்போலே
தோணியுங்கோணுது கோணிநடந்தாலுமென்ன

வசனம்

நந்தனார் அம்பலவாணனைக் கொண்டாடிக்கூத்தாடுவார்

கீர்த்தனம்-கடுக்கா.

நந்தனானந்தபரிதானான் நந்தனாரும் ஆனந்தமாகினார்
சொந்தமானவயல்வந்துபார்க்கையில்
விந்தையாச்சுது பலபந்தம்போச்சுது
சிந்தைதிரவேயந்தரங்கத்தின் நந்தனா
நீச்சச்சாதியென்றுபேசிப்பேசுமிந்த
தோசிவேதியனு'மாசையாகவே
தேசமெற்றுந்தில்லை வாசமாகுந்ட
ராசபூசுதகிக்குதாசனென்றவரும் நந்தனா
வாருவாருமிதைப பாருமபாருஞ்சிவ
னே வந்துசெயுங் காரியங்களிது
பாரின்மீதிலிணையாருமில்லையென
ஊரிலுள்ளபெரியோருஞ்சொல்லச்சொல்ல நந்தனா
சித்தமீதிலொரு குற்றமேதுமில்லை
சுத்தமானவிதயத்திலுள்ளசிவ
பத்திபண்ணிவெகு சித்தியாகிவர
முத்திதேடிவருபத்தனென்றுமகிழ் நந்தனா

வசனம்.

நந்தனைப்பார்த்துசிவபத்தர் அபசாரமபண்ணினோமென்று மிக வுங்குழைந்துசொல்லுவார்.

தரு-இ-ம்-பியாகடை-அடதாளசாப்பு.

பல்லவி

நந்தனாரேயுன்றன் பெருமையின்றுகண்டேன்
நானென்வினையை விண்டேன்

அனுபல்லவி.

விந்தையைக்குறியாமல விழலனையறியாமல்
விம்புக்குக்கச்சுகட்டி வீசினேனென்னையாளும். நந்த

சரணங்கள்.

அறியாமனத்தினாலே ஏதோபசி யான்
அருமையைத்தெரியாமற்போனேனே மெத்த

சிறியோர்செய்தபிழைபெரியோர்பொறுப்பதென்று
செப்பும்வார்த்தையுமக்கேகனவானோ
முறையுணர்ந்தோர்க்குளென்னதான்சொல்லக்
மூடன்மேற்கிருபைவைத்துமுழுதுங்காத்திட
நிறைவுற்றவருட்பெற்றோர்க்கேதுநிகராம்
நினைக்குமுன்னடிவணங்காதோவந்துயர்
நேற்றுப்பொழுதளவுஞ்சும்மாவிருந்த
நிலங்கள்முற்றும்பயிர்கள்முளைத்துக்
சாற்றுங்கதிர்கள்முற்றிச்சாய்ந்து
தக்கதாவிருக்குதேமிகக்கிளைத்து
ஆத்தல்தனக்குநிகராவரோ
ஆய்டாவுனதுநல்லருளால்நலமே
நாற்றிசையோர்களும்நாடிப்பணிய
நாயேன்களிக்கமனம்நயந்துகிருபை
குண்டைகளுங்கலப்பைக்கோலுங்காறும்
கொட்டத்திலிருக்கநீர்செய்திரோ
ஆண்டர்பணிக்கிலையாண்டவனே
வடிமையாளாகிவந்துசெய்
உண்டத்தைதாவெனவெருண்டுக்குமைக்
தொல்லுலகத்துள்ளோர்யாருமேசக்

இந்த
சேனும்
மேனும்
காணும்
வேனும் ந
இந்த
கதிக்கச்
அறுவடைக்குத்
உமது
யாவரும்
வரும்
வரும்
தரும்-நந்த
விதையும்
அந்த
யுமக்கு
தாரோ
கொண்டேன்
கண்டேன்-நந்

வசனம்,

என்றுவேதியர்சொல்லிப் பின்னுஞ்சொல்லுவார்

இதுவும் வேதியர்சொல்-விருத்தம்.

கறைபடுங்கண்டன்றனைக் கருத்தினிற்பெறவேநோக்கி
குறையருந்தணருக் குலமதுவெழுமென்றெண்ணி
மறைபுகல்பெருமையாலே வருந்தினேன்கொடியனென்று
இறைபடுவெளம்போலஞ்சி யேங்கியேயாற்றுவானே

கீர்த்தனம்-இ-ம்-புன்னாகவராளி-ரூபகதாளம்.

குற்றமெத்தனைசெய்தபோதிலுமுந்தன் சித்தத்தில்நினையாதே சுவ
பாத்தனென்றறியாமல் பதறிவார்த்தைகள்சொன்ன பாலந்தலையாதே

புலையர்கள்பரகதிபெறும்படியவர்புண்ணியஞ் செய்வாரோ-உன்னை
கலிதீரக்கண்ணாற்கண்டோர்கமெல்லாக காட்சிபெறுவாரோ
ஒருவன்மனதறியவொருவனலாகாதென்றுலகம் மொழியாரோ அது
திறமாச்சுதினியுந்தன்சென்மசபலமாச்சு தெய்வமுமிறங்காதோ
ஜாதிபிறிகுலஞ்சாஸ்திரங்கிடையாது சந்தேகப்படலானேனை இப்போ
ஆதிசிதம்பரரகசியம்பாரென்று அனுப்பிடலானேன்

வசனம்

இப்படிமிகவும்வணங்கிவரலாற்றைக்கேட்க நாளைப்போர் கனவிலே நடேசன்வந்து கருணைசெய்தாரென்றார் அதற்குநாளைப்போவானைப் பார்த்து வேதியர்சொல்லுகிறார்

கீர்த்தனம்-இ-ம்-யமுனகல்யாணி-ஆதிதாளம்,

பல்லவி

நந்தாவுன்கனவினி லெப்படிவந்தார்
வரந்தந்தாரென்றாய் நந்தா
சந்ததமுஞ்சனகாதிமுனிவர்தொழும்
சச்சிதானந்தமூர்த்தியல்லவோ நந்தா
ஆதிமுடிவுங்கிடையாதபராபரஞ்
சோதியல்லவோநீச்சசாதியென்றறிந்தும் நந்தா
அண்டரண்டநிறைகின்றசபாபதிக்
கொன்றுபேதமில்லையென்று நந்தா

வசனம்.

வேதியர்செய்தபிழையெல்லாம்பொறுத்துக்கொள்ளுமென்றுசொல்லநந்தனார் மறுவுத்தரவுகூறல்

கீர்த்தனம்-இ-ம்-தெண்டகம்-எதுகுலகாம்போதி;

வேதியர் ஏழைப்பார்ப்பான்செய்திடும்பிழையை
யேந்துக்கொள்ளாதே நான்
இனமறியாதவன்முன்புத்திக்காரனென்பதும்பொய்போ
நந்தனார் பொய்யாகியவிந்தவுலகத்தைப்பார்க்கும்
புண்ணியவானே நான்
புலையனுக்காளடிமையல்லவோபுத்தி சொல்லுமையே

திருநாளைப்போவாரென்னும்.

வேதியர் புத்தியுண்டுவித்தையுண்டு
பத்திகிடையாது. உதலால்
புலம்பினதாலென்னமனமடங்காது போகங்கிடையாது

நந்தனார் கிடைக்குஞ்சிதம்பரதெரிசனமென்று
கிருபைசெய்யு மையே
கீழ்குலமல்லவோ நாயினுங்கடையேன்கீர்த்திபெறுவீரோ.

வசனம்.

பரமபத்தனாகிய நீயேஎனக்கு அடிமைவேலைசெய்பவன்போல வந்த படியினாலே என்பிறப்பிணி துலைந்ததென்றுசொல்லுவார்

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அப்பொழுதுபோனதன்றிமறைமுடிவையுளங்களிய
யறிவிலுன்னித்
தவம்பொழுதுங்கணப்பொழுதுங்கண்டறியாப்பாவியெனைச்
சார்ந்தான்றோ
சிவக்கொழுந்தினடிமையென்று பெயரிட்டுவேலைகளைச்
செய்ததாக
பவக்கடலைக்குளப்படிபோலதாண்டிவரச்செய்ததுந்தன்
பத்திதானே

கீர்த்தனம்-இ-ம் ஆனந்தக்களிப்பு.

நந்தா நீசிவ
நம்யாமலேமோசமானேனுன்
பூமிக்குள்நீயொரு
பூமிக்குநானொருசாஸ்திரப்பிர
சாமிக்குள்ளேவெகு
கண்டுதெரிசித்தபேர்களே
படித்துமென்னவேதங்கள்
பார்த்ததில்லையிந்தபகவன்
எடுத்துச்சொன்னாய்சிவ
ஏற்காமல்போச்சுது
தெவிட்டாதேசோகம்
தேகமுழுதிலுஞ்சிதன்திரு

பதத்தின்-உன்னை
பித்தன்
சித்தன்-இந்தப்
சித்தன்
மத்தன்-உன்னைக்
மூத்தன்-நந்தா
வேதம்-அகில
கீதம்
போதம் - அது
என்பிடிவாதம்-நந்தா
பாணி-உந்தன்
மேனி

பகையாகியொரு கூனி-போலே
பழுதகேனைத்துரியோத்தும் ஞானி-நந்தா
பவசாகரந்தாண்டிச் சன்றாய்உள்ளே
பார்த்துணர்ந்துபரமானந்தங் கொண்டாய்
தவமானிபோலே நின்றாய்-தில்லை
தாண்டவராயனைக்காணுமல்நீ கண்டாய்-நந்தா

வசனம்.

இப்படியே வேதியர்சொல்லும்போது நந்தனார்மனம்நொந்து கை கால்நடுங்கி ஐயரைச்சுற்றிவந்துவணங்கினைக்குஅன்னங்கொடுத்து ஆடையளித்து இதகனைநாளுங் காப்பாற்றினபெரியவரோ உங்களுக்கடிமை வேலைசெய்யுமென்ன இப்படிப்பெருமையாய்ச் சொல்லவேண்டாமென்று சொல்லுவார்

தரு-இ-ம்-கலியாணி-ரூபகதாளம்,

பல்லவி,

ஐயாசொல்லு வேனே-உம
தடிமைப்பறையன் தானே

அநுபல்லவி

மெய்பாகவேயிந்தனிவாழ் யோர்கள்
வேலைசெய்யூழியர் தம்மையோ தாழ் வாரகள்-ஐயா

சரணங்கள்

வேம்புக்குயர்ந்தமதுரங்கள் பூட்டினும்
வீறுமதன்குணம்மாறுமெதன நாட்டினும்
ஆம்புதநிக்காரரென்றுலேயாவ துண்டோ
அய்யனருளையல்லாமலும் வேறுண்டோ ஐயா
மேவுங்கீளாததண்டுமேருவைக் தாங்குமோ
வீசும்கதிர்மின்னும்பூச்சி யோங்குமோ
ஆவதழிவதெல்லாமையன் றன்னாலே
ஆச்சுதென்றாலென்ன ஆச்சுது என்னாலே ஐயா
முன்னமேசெய்தவினையின் வசத்தாலே
மூடப்புலையனுற்பேவி யதனாலே
இன்னம்பவேதுன்னின்னமும் வண்டா
ஏந்திக்கொள்ளுமென்றனைக்கெடுக்க வேண்டா ஐயா

வசனம்.

நந்தனார் தனது ஆண்டையாகிய வேதியனைப்பார்த்துத் தங்களுடைய குருவாக்கினால் எனனையுமிப்படிப் புகழலாமாவென்றுமிகவும்வணக்கமாய்ச்சொல்லுவார்

கீர்த்தனம்-இ-ம்-அமிர்தகல்யாணி

பல்லவி.

சின்னசாதியல்லோ சிதம்பரமபோய் வருகிறேன்நான் — சின்

அன்னைதந்தையொருவரில்லை அடைக்கலமென்னையாளவேணும் — சின்

ஈரமில்லாநெஞ்சமாகி இறைச்சிதின்றவுடல்பெருத்த — சின்

அல்லும்பகலுமதுவையுண்டு அறிவுமயங்கியாட்டங்களும் — சின்

வசனம்

இப்படிசொல்லிய நந்தனைப்பார்த்து வேதியர்சொல்லுவார்

கீர்த்தனை-இ-ம-பைரவி-திரிபுடைதாளம்,

பல்லவி

ஆருக்குப்பொன்னம்பலங் கிருபையிருக்குதோ
அவனேபெரியவனும்

அனுபல்லவி

பாருக்குள் வீடுகள் மாடுகள் ஆடுகள்
பணமிருந்தாலவன் பெரியவனுவானோ — ஆரு

சரணங்கள்,

வேதபுராணங்களோதினதாலென்ன
வேலைசூழ்புவனமாதராலென்னகாரியம்
சாதனையூர்கவராமகாருநாளும்
மண்ணாசைபெண்ணாசைபொல்லாது
பாணமதங்களடங்கவேசெய்தகோ
பாலகிருஷ்ணனைதினந்தொழுமம்பல
வாணனென்றுசரவாய்விரும்பாதவ
வானவராகிலுந்தான் தனசின்னவன்

வசனம்

பொன்னம்பலஞ் சிவபத்தியுள்ளவன் பெரியசாதிசிவபக்தியில்லாதவன் பார்ப்பானுயிருந்தாலுஞ் சின்னசாதியானபடியினாலே திருப்புன்கூரிலுனக்காகப் பரமசிவன்சந்நிதியைவிலக்கி தெரிசனங்கொடுத்தும் குளம் வெட்டினது ஒருராத்திரிகாலத்திலே நாற்பதுவேலிநிலமும் நடராஜமூர்த்தியேவந்துநட்டுவைத்தும் பார்க்கும்போது நீயே மகா புண்ணியபுருஷனென்று-சொல்லவேணுமேயல்லாமல் வேறில்லை நீயிதுவரையிலெனது வார்த்தையைத் தள்ளினதுமில்லை ஆகையால் எனக்குகுருவாகியின்று உபதேசம்பண்ணென்று பின்னுஞ்சொல்லுவார்

கீர்த்தனம்-இ-ம்-தண்டகம்-ஆதிதாளம்

பல்லவி

நந்தாநீகுருவுபதேசம்நவிலவேணும் நானகடைத்தேறநீ
நொந்தாநான்கதிபெறமாட்டேன்
நோயெனும்பிறவிக்கடலிடைவீழ்வேன்
மந்தாரப்பூவெடுத்தானூர் மலரடிசாற்றிவாழ்வென்னறிவு
சிந்தாமலவரந்தரவேணும் சிதம்பரரகசியந்தெரிசித்திடவே
வைத்தாக்கருணைக்கடலுன்மனதிற் சென்றுநீகீர்த்தனம்புரிந்து
ஒத்தாசைபூதகணங்களுரிமையுடன்வந்தூழியஞ்செய்ய
பெற்றாநீபெரியவனுந்தன்பெருமையைநானறிவேனேழை ன்
கத்தாமுஸ்மோசமதானேனம்பிக்கை சொன்னேனற்கதிபெறவே நந்த

கலிவிருத்தம்

வேதமோடறஞ்செய்திடுநூற்களைவிதித்தும்
ஆசனாகிஉன்னடியவர்க்கஞ்சினமடைய
பாதகம்புரிந்தேனென்றுந்தனைப்பாவி
ஏதந்திரலேவேதியருபசரித்திருந்தார்

வசனம்.

இப்படிசொல்லிய வேதியர்வார்த்தையைத் தள்ளப்படாமையால்சுற்றிவந்துதலைவணங்கி ஒருமூலையைநோக்கிச் சொல்லுகிறாப்போல் சொல்லுகிறாள்

கீர்த்தனம்-இ-ம்-புன்னாகவராளி-ஆதிதாளம்

பல்லவி?

ஐயேமெத்தக்கடினம் உனக்கடிமை ஐயேமெத்தக்கடினம்

அநுபல்லவி,

பொய்யாதபொன்னம்பலத்தையாயிருக்குமிடம்
கையாதமனிதர்க்கு உய்யாதுகண்டுகொள்ளும் ஐயே

சரணங்கள்

பாலகிருஷ்ணன்பணிந்திடு சீலகுருசிதம்பரம்
மேலேவைத்தஆசையாலே காலனற்றுப்போவனென்று
சாத்திரம்நல்லசூத்திரம் ஞானநேத்திரங்கொண்டு
வாசியாலேமூலக்கனலில் வீசியேசுழன்றுவர
பூசைபண்ணிப்பணிந்திடு மாசற்குண்டலியைவிட்
டாட்டுமேமனமூட்டுமேமேலோட்டமேவழிகாட்டுமேயிந்த
மானாபிமானம்விட்டுத்தானாகின்றவர்க்குச்

சேனாபதிபோல் ஞானாதிபதியுண்டு
பாருமேகட்டிக்காருமேஉள்ளே சேருமேஅதுபோலுமே அங்கே
சகலசயநவேநின்று பொங்கிவருமபாலுண்டு
அங்கமிர்தப்பாறிகொண்டு தங்கபொம்மைபோலவே
நில்லுமேவாருஞ்சொல்லுமேஞானஞ்சொல்லுமேயாதும்வெல்லுமே
அட்டாங்கம்பண்ணினாலுங் கெட்டாங்கப்பண்ணியது
இட்டாதுகிட்டவாவொட்டாணமுட்டியது
பாயுமேமூனேயுமேஅதுவேவாயுமே உள்ளேதோயுமேவேத
மந்திரத்திலேயுமில்லை அந்தரத்திலேபவ
தானமேஅதுதானமேமலைகளைமேபேசாமோனமேஅந்த
முப்பாழுந்தாண்டிவந்து அப்பாலேநின்றவந்து
இப்பாவைகிடையாது அப்பாதிருநடன
மாடுவார்தாளம்போடுவார் அன்பர்கூடுவார் இசைபாடுவார
கண்டாருங்கிடையாது விண்டாருஞ்சொன்னதில்லை
யண்டாண்டகோடியெல்லா மொன்றாய்ச்சமைந்திருக்கு
மல்லவோ அதைக்கொல்லவோபறையன் சொல்லவோ
சொல்லவோநேரமாகுதல்லவோ

கலிவிருத்தம்

வானவேவியவும்பாவாழ்த்தியமறையைக்
கானமேசெய்யும் வேறேயுமக்கடிமை
ஈருமாமிழிகுலத்தினிலெய்தியநந்தன்
ஞானவாரிகொண்டேயவாருறநனைந்தார்

வசனம்

இந்தப்படிநந்தனார்சொல்ல வேதியாகேட்டு திவ்வியஞான மடைந்து நந்தனைபார்த்துச்சொல்லுகிறார்

கீர்த்தனம்-இ-ம்-சாமா-ஆதிதாளம்

கண்ணிகள்

சிதம்பரம்போய்நீவாருமையா    நான்
செய்ததெல்லாமபசாரமையா    சிதம்
சிதம்பரம்போவீர்பதம்பெறுவீர்    வேறே
சிந்தனைவேண்டாம்நந்தனேயினிமேல்
எத்திசையிலுமுமக்கிணைசொல்லப    போமோ
பத்தியுளதலென்றுபழகியபெரியவர்    சிதம்

சித்தமுந்தெளிந்தது தெய்வமேநீரென்று
புத்தியும்வந்தது கெதியிதுவல்லவே (சிதம்)

வசனம்.

இப்படிச் சொல்லிய வேதியரைச் சுற்றிவந்து தலைவணங்கி ஒடுக்க வணக்கத்துடனே தூரவிலகிநின்று வேதியரை ஆசிர்வாதம்பண்ணச் சொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-ஓரடியிலிரண்டுவார்த்தை-துக்கடா.

| நந்தனார். | வேதியர். |
|---|---|
| சிதம்பரதெரிசனங்கிடைக்குமோ | கிடைக்கும் |
| ஜென்மசாபல்லியமாமோ | ஆகும் |
| பதம்பெருந்தவநெறியறிகிலேன் | அறிவீர் |
| பரமனருள்செய்வாரோ | செய்வார் |
| ஜாதியில்தாழ்ந்தவனல்லவோ | அல்ல |
| சாத்திரமுறைமைக்குஞாயமோ | ஞாயம் |
| ஆதியாம்பலதெய்வம்நாடுமோ | நாடும் |
| ஆனந்தமடைவேனையரே | அடைவீர் |

வசனம்.

வேதியர் நந்தனருக் காசிர்வாதம் பண்ணி யனுப்பியபின்பு நந்தனருடைய குணாதிசயங்களைக் கொண்டாடுவார்.

அறுசீரடி யாசிரியவிருத்தம்.

அடியவர் மனமிடியப் பேசினதுண் டபாராத
மனந்தங் கோடி
படுநரகில் வீழ்வாரென் றெனவுரைக்கும் பாவமது
பலித்த தென்று
அடிஅடித்து தொடைநடுங்கி நீர்வடிந்து சிதம்பரத்தே
துதிகள் செய்து
கடிபுகழுந் திருத்தொண்டர் குணமெல்லா முலகறியப்
பகருவாரே.

இதுவுமது.

சாஸ்திரக் குப்பையெல்லாந் தள்ளினேன் பதருபோலே
காத்திரஞ் சுத்தமாச்சு கனிந்திடு முள்ளம்பத்தி
மாத்திர மிருந்தாற்போது மற்றொன்று மில்லைசைவ
க்ஷேத்திர முழுதுஞ்சுற்றிச் சேருவேன் றில்லையென்றார்.

கீர்த்தனம்-இ-ட-சௌராஷ்டகம்-ஆதிதாளம்

பல்லவி.

எந்நேரமும் நந்தனைச்சிந்தித்தா
னந்தனாகியிருந்தனரந்தணர் (எந்த)

பந்தந்தீரவே யிந்தவுருவாகி
வந்ததோவரந் தந்ததோசிவனென் (எந்த)

வசனம்.

விட்டதோ இந்தவீட்டுக்கவலைகள் பட்டதோ பவசாகரச் சேரழிந் திட்டதோ முக்திவெள்ளம் கரை புரண்டதோ வென்று வந்தித் தொழுபவர் எந்நேரமும் வேதிய ரிப்படியே சிவபக்தி பண்ணிக்கொண்டு ஆனந்தமடைந்திருந்தார். அப்படியிருக்க நந்தனர் ஆதனூரை விட்டுச் சிதம்பரம் வருகிறார்.

கீர்த்தனம்-இ-ம-லாவணி-ஆதிதாளம்.

நந்தன்சிதம்பரம்வருகிறார் ஆதனூரைவிட்டு
கொள்ளிடந்தாண்டி யப்பால் வருகையிலே
தொண்டரங்கம்பரவசமாய் எங்கும்பொங்கிச்சிவமாய் (நந்த)

அந்தக்கருணை விருத்தியழிந்து
அநேகஜென்மவாசனையை
யனல்கொண்டுதிகைத்தாரோ சஞ்சிதவினையென்றுரைத்தாரோ (நந்த)

குண்டலிசக்தியைக்கொண்டு
கிளம்பிமண்டலம்புகுந்து
சஞ்சரித்துக்கொண்டார் குறையஅமுர்தமுண்டார் கிளையார் (நந்த)

அநாதிமாய கற்பிதமிந்த
நாமரூபாதி பிரபஞ்சமெல்லா
மழிந்துபோமென்பார் குறைகட லெழுந்தநானேயென்பார் (நந்த)

சைவத்தலங்களிற் றெய்வமிதுவே
சத்தியம்பண்ணுவேன் நான்பறையன்
சதுர்மறைகேட்டிலையோ மிக்க ஷண்மதங்கேட்டிலையோ (நந்த)

எப்போதும்நட ராஜமூர்த்தியின்
இணையடிதொழுதார்க் கிடமேயோ
யிந்திரபதிகளோ திரும்பியும் வந்தவர்காண்கிலோர் (நந்த)

ஈசன்கருணை னேசமிலாதவ
னெத்தனைவேதங்கள்கற்றாலு
மெட்டபெருங்கொம்பு நெருங்கிற் றொட்டால்செங்கரும்பு (நந்த)

ஆதனூரிலொருபுலையனுக்காக
அம்பலநாடக மாடுவரோ
வருந்தவம்புரிந்தேனோ கனவில் வருந்தியுமிருந்தேனோ (நந்த)

அரகரசம்பு சதாசிவனேபொன்
னம்பலத்தாடிய தேசிகனே
ஐயேயுன்னடிமை மனது நையேனோவுன்னடிமை (நந்த)

செழித்துவியனுல கெட்டிச்சிகரங்க
ளாந்துந்தெரியுது காணையே
தில்லைத்தலமென்பார் அன்புடன் சொல்லப்பலமென்றார் (நந்த)

குதிப்பாரொருதரங் களிப்பார்கண்ணீ
ரருப்பாருனந்த லாகிரியால்
கொண்டாடிப்பாரோ குரவை நன்றாய்ப்படிப்பாரோ (நந்த)

பாரளந்தகோ பாலகிருஷ்ணன் றுதி
பாடுந்திருவடி பணிவேனோ
பரகதியடைவேனோ பூமியில் மறுபடி வருவேனோ (நந்த)

வசனம்.

நந்தனார் ஆதனூரை விட்டு கொள்ளிடத் தருகில் வரும்போது சொல்லுகிறது.

கீர்த்தனம்-இ-ம்-முகாரி-அடதாளம்

பல்லவி.

கொள்ளிடக்கரைபோனான்-நந்தன்
கோபுரங்களைக்கண்டான்

அநுபல்லவி.

பள்ளச்சாதியிலும் பறைச்சாதிநானென்று
உள்ளமுருகியவர் வெள்ளைக்கரைபுரள (கொள்)

சரணங்கள்.

ஓடத்தின்மேலேறி - நந்தன்
ஓங்குமகிழ்ச்சிமீறி
நாடியவரும்நல்ல நடனக்கூத்தாடி
நணியுடன்றதிபெற லாமென் றுதுதிகொண்டு (கொள்)

அக்கரைபோனானே — நந்தன்
ஆனந்தங்கொண்டானே
சிக்கெனவேசிவ சிதம்பரேசனைக்காண
சிந்தைமகிழ்ந்துசிவ தியானஞ்செய்துக்கொண்டு (கொள்)

திருவாதிரைத்திருநாள்-செய்யுந்
தினமல்லவோயிந்நாள்
திருநடராஜமூர்த்தி திருமுகந்தனைக்காண
சித்தங்களிப்பேனென்றுறுதிகொண்டு (கொள்)

வசனம்.

இந்தப்பிரகாரந் தோத்திரஞ்செய்து கொள்ளிடக்கரைதாண்டி வரும்போது தில்லைக்கோபுரத்தைக்கண்டு தெரிசனம்பண்ணுவார்.

கீர்த்தனம்-இ-ம்-தண்டகம்-ஆதிதாளம்

பல்லவி.

கோபுரதரிசனமே-எந்தன்-பாபவிமோசனமே

தாபங்கள்மூன்றுந் தணித்துவிடும்நல்ல
சோபனமுண்டாஞ் சோதிவிளங்கிய (கோபுர)
விண்ணளாவுமே லோங்கியேகண்டு
கண்ணுளார்க்கெல்லாக் காட்சியளித்திடும் (கோபுர)
அல்லும்பகலு மமரர்துதித்திடும்
தில்லைநிறையோன் றினமுமகிழ்ந்திடும் (கோபுர)

வசனம்.

தில்லைத்தல மிப்படி யிருக்குதென்று

கீர்த்தனம்-இ-ம்-நவரோஜ்-ஆதிதாளம்

பல்லவி.

மாங்குயில்கூவியசோலைகளும் வாவிடசகூபதடாகங்களுந்
தூங்கதிர்மண்டலமெத்தையுஞ் சொர்னசபேசன் றுசமாமும்
நாலுபுரத்திலுங்கோபுரமும் நவமணிச்சித்திரமண்டபமும்
சிலமுறுந்திருவீதிகளுந் தில்லைவேதியர்மாளிகையும்
கண்டேன்கலிதீர்ந்தேன் என்கவலையெல்லாமொழிந்தேன்
மண்டலம்புகழுஞ்சபேசன்சந்நிதி வாழ்த்திப்பணிந்துநின்றேன்
தஞ்சமென்றடைந்தேனிந்தச் சடலத்தால்நொந்தேன்
அஞ்சவேண்டாமென்றொருதரஞ்சொல்லி யழைத்தாலாகாதோ
அப்பாவுன்சரணம்தில்லைக் காவேயுன்சரணம்
ஒப்பாரில்லாநாடகம்பயிலு மொளியேயுன்சரணம்

வசனம்.

கோபுரதரிசனமே என்கிற கீர்த்தன முதற்கொண்டு சிதம்பர விசாரென்று பெயர்.

சிந்து.

சிவன் வேடிக்கை தானென்று நாடிக்கொண்டே அறியாதது போலிருந்த செம்பொன் னம்பலத்தாடியைக் கும்பிடவே ஆதனூர்த்தனிலிருந்துவிடும் அம்புபோலப்பறந் தையமின்றித் தில்லையருகில் வந்தார் மனந் தேறிக்கொண்டார்குறை யாறிக்கொண்டார் கெண்டாமணியோசை,

திருநாளைப்போவார்புராணம்.

விருத்தம்.

நாளைப்போவேனென்றார்கள் சொலத்தெரியாது
பூளைப்பூவாம்பிறவிப்பிணிப் பொழியப்போவாராய்ப்
பாளைப்பூங்கமுகுத்தபழம் பதியினின்றுபோய்
வாளைப்போத்தெழும்பணஞ்சூழ் தில்லை மருங்கணைந்தார்.

இதுபொழிப்புரை.

வசனம்.

நாளைப்போவேனென்றுசொல்லி அநேகநாள்ஒழியச் சபாநாதனைத் தரிசனம்பண்ணவேண்டுமென்னும் ஆசையை அடக்கக்கூடாதவராய் பூளைப்பூவையொத்த நிலைமையையுடைய பிறப்புகளால் உண்டாகிய சம்பந்தம் நீங்கும்பொருட்டு போகின்றவராய், பாளையையுடைய பொலிவாகிய கமுகமரங்கள் சூழ்ந்திருக்கும் பழமையுற்ற தம்முடைய ஊரில்நின்றும் புறப்பட்ட ஆண் வாளைமீனானது எழும்பிவிளையாடும் வயல்களையுடைய சிதம்பரத்தின்எல்லையையடைந்தார்.

கீர்த்தனம்-இ-ம்-கரகரப்பிரியை-ரூபகதாளம்.

கெண்டாமணியாடுது சண்டுபிணிவாடுது

| | | |
|---|---|---|
| முத்திமணிதேடுது | நாடுதுகூடுது | (கெண்டா) |
| பரவசமாகுது | பாவங்கள்போகுது | (கெண்டா) |
| ஜெனனமரணதிகள் | மோசமுதிர்ந்து | (கெண்டா) |

சிந்து.

கெண்டாமணியோசை காதில் கேட்குதென்று றதைப் பார்க்கவென்றே கொண்டாட்டமாகிவந்தார் சையைக் கும்பிட்டேனமக் கம்பிட்டதோ வென்றேமனமகிழ்ந்தார் தெரு வீதியிலேவந்துகாதலுடன் கண்டார்களையாறி இருகண்களிலானந்தம் பொங்கிடவே நின்றார் மதிற்புறத்தே வெகு நேர்த்தியென்றுரிதைப் பார்த்ததில்லை பணிந்தார் பரவசமாய் நல்ல பாக்கியசாலிகளாகுமென்றார் இதுதானோ தில்லைப்பதி.

வசனம்.

நந்தனார் தில்லையைக்கண்டு ஆனந்தானுபூதியைச் சொல்லுகிறார்

கீர்த்தனம்-இ-ம்-தெண்டகம்-ஆதிதாளம்

பல்லவி.

தில்லைத்தலத்தைக்கண்டார் ஆதி சித்திவிலாசமென்றார்-அந்
எல்லையிலேவெறிநின்றார் மனதேக்கமாகக்கொண்டார்
இருகண்கள்நீர்வடித்தார் கொடுங்காமமலையறுத்தார்
இருகையைத்தூக்கிக்குவித்தார் தன்காலைக்கோணிக்குதித்தார்-இந்
ஐம்புலன்களைமறந்தார் பரமானந்தக்கடலுறைந்தார்
தனதேகபாவமறந்தார் தில்லைச் சிவனேயென்றிருந்தார்

கீர்த்தனம்-இ-ம்-பியாகு-ஆதிதாளம்.

இதுதானோ தில்லைத்தலம்-இத்தனைநாளுமறியேன்
இதுதானோ தில்லைத்தலம் (இது)

அதுவேவாயிதுவோவென்று அலைந்திடும்பேயனைக்
கதிதருவேனென்று கைகாட்டியழைக்குது (இது)

காசினியிலிதைக் கயிலையென்றெல்லோரும்
பேசக்கேட்டதேயுண்டு பேணிப்பார்த்ததில்லேன் (இது)

வசனம்.

நந்தனார் தில்லையைக்கண்டு கொண்டாடுகிறார்.

கீர்த்தனம்—இ-ம்-இந்துஸ்தான் காபி-ஆதிதாளம்.

பல்லவி.

தில்லைதில்லையென்றார் பிறவி இல்லைஇல்லையென்று மறைமொழியும்

தொல்லைதொல்லை யென்றகொடுவினை
வல்லைவல்லையென் றகலுந்திருத் (தில்லை)

கற்றோருங்கற்றோருங் களங்கமறிந்திட
பெற்றோரும்பெற்றோரும் பேசாப்பெருமையி
லுற்றோருற்றோரும் பொன்னம்பலத்தில்
தத்தோந்தத்தோ மென் றாடனயிடும் (தில்லை)

வாடிவாடிமா லயனீசருக்கும்
கூடிக்கூடிக்கொண் டல்லும்பகலும்
தேடித்தேடித் திருவடிமுடிகளைப்
பாடிப்பாடிக்கோ பாலகிருஷ்ணன்தொழும் (தில்லை)

துண்டா-௩-ம்-தேசிகதோடி-ஆதிதாளம்

பல்லவி.

இதுவோதில்லைச் சிதம்பரக்ஷேத்திர மீசனிருப்பிடமோ
மதுரம்பொருந்திடும் மறையோரிருப்பிடம்
மாமுனிவர்தவம் வாழும்பெரியிடம்
பக்திபெருந்தொண்டர் பணிந்துவருமிடம்
பாதெய்வமுமல்லில் பாதியிலுறுமிடம்(இது)

கீர்த்தனம்-௩-ம்-பியாகு-ரூபகதாளம்.

ஆடுஞ்சிதம்பரமோ வையன்கூத் தாடுஞ்சிதம்பரமோ
ஆடுஞ்சிதம்பர மன்பர்களிக்கவே
நாடுஞ்சிதம்பரம் நமச்சிவாயப்பொருள் (ஆடுஞ்)
ஆருமறியாமல் அம்பலவாணர்
சீரடியார்பார்க்கச் சேவடிதூக்கியே (ஆடுஞ்)
பாலகிருஷ்ணன்போற்றும் பானுமதிச்சடையினர்
தாளமத்தளம்போட தாதெய்தாதெய்யென்று (ஆடுஞ்)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

தில்லையைக்கண்டபோதே தெளிந்ததென்னுள்ளமெல்லாம்
பல்லூழிகாலஞ்செய்த பாழ்வினைதொலைந்துபோச்சு
நல்லருள்நடனங்கார்க்கும் நாயகனார்சிற்சபைக்கு
சொல்லுவார்மகிமைசெப்ப சேடனாலாகாதென்று.

வசனம்.

இப்படியே தில்லையைக் கொண்டாடி தில்லையைப் பாராதவரோ பாவியென்பார்.

கீர்த்தனம்-௩-ம்-சவேரி-சாபுதாளம்.

பல்லவி.

மார்கழிமாதத்திருவாதிரைநாளையில் வந்துசிதம்பரதேசிகனை
பாராதபாவிகட்கேதுமில்லையிந்தப் பாரில்வந்துபிறவாதவரோ
வானிற்செருகுந்திருமாளிகைமண்டப மாவதிலுந்தில்லைமாநகரம்
காணக்கிடைக்காதஇந்தபாக்கியங் காதில்கேட்டவண்ணங்கண்டது
ஆதிபராபரமாகியதில்லைப்பொன் னம்பலவாணர்சந்நிதியில்
நாதமுழங்கிநமுழங்கெட்டுஆனந்தநாடகசெய்வோனைநானைத்தேடன்

வசனம்.

நந்தனார் சிதம்பரங் காணாததனால் சிவலோகங் காணாரென்பார்.

கீர்த்தனம்-இ-ம்-சாவேரி-ரூபகதாளம்.

பல்லவி.

சிதம்பரம்வந்துதெரிசியாத ஜென்மம்வீணென்றுபேசு
மனதிலெண்ணினார் பாதகமலந் தியானம்பண்ணினார்
பறையனுக்குமித்தத் தலத்தைப்பார்த்தபின்பு மோக்ஷபதவி
பலித்ததல்லவோ பாவிஜெனன மறுந்ததல்லவோ
தொண்டுகொண்டதங்களையர்பெருமையெல்லாஞ்சொல்லிச்சொல்லி
துள்ளித்தாவினார் ஞானவிரையை யள்ளித்தூவினார்
பூதலந்தனி லிதுவேதெய்வமென்று நந்தனானந்தக்கடல்
பொங்கிப்பாடினார் புண்ணியத்தல மென்றுதேடினார்

கீர்த்தனம்-இ-ம்-புன்னாகவராளி-ரூபகதாளம்.

அரகராசங்கரவண்ணாலேயம்பலந்தானே
நாளுந்தனடைக்கலமென்று
உருகித்துதியாரோ-வானந்தம்
பெருகிப்பதியாரோ

முத்தியளிக்குந்திருமூலத்தானனைக்கண்டு
பத்திபண்ணாதவன் பாமரனல்லவோ
பாருக்குச்சுமையாச்சு-அவனிருந்து
மாருக்குச்சுகமாச்சு

மங்கையர்மோகமாய்மயங்கித்தினந்தோறு
மங்களபுங்கிதமாயவரின்மேல்
கொண்டாடிக்கிளிபுகழ்ந்தாரோ-அன்னியமாய்
நாளையுங்கழித்தாரோ

வீசநடைநடந்தமெய்யும்பொய்யாகவே
ஓசையடங்கும்போதொருவருமங்கில்லை
தூசியும்போகாதே-காதறுந்த
ஊசியும்வாராதே

சிவசிதம்பரமென்றுதில்லைவெளியினின்று
பவசாகரமென்றுபரமபதமடையுந்
தவநெறிபொருந்தாரோ-பொருந்திய
வவனையும்வருந்தாரோ

சாத்திரங்கற்றாலுஞ் சதுர்மறையுணர்ந்தாலும்
ஆத்திரம்பெற்றாலுஞ் சொல்லேனய்யங்கா

மாத்திரம்போகாதே-கருணைக்குப்
பாத்திரமாகாதே

சரணாகதியென்று சார்ந்தடிபணியாமல்
வருணாஸ்திரம்விதி வழுவாதிருந்திலுஞ்
ஞானாதிகள்விடுமோ-சரவண
மனாதிகள்படுமோ

அஷ்டசித்திகள்பெற்று ஆண்டாயிரங்காலம்
மட்டிருந்தாலுமென்ன மரணபயனெய்திலா
நஷ்டஜென்மமாச்சே-மனிதஜென்ம
மெட்டிவீணாய்ப்போச்சே

முப்பாழுந்தாண்டி மூலத்தீமூட்டிக்கொண்
டப்பாலேநின்று னானந்தங்காணலா
மொப்பாரில்லையடா-உடுருகி
நிற்பாரில்லையடா

ஆலமிடறடக்கி யம்பலக்கூத்தன்கோ
பாலகிருஷ்ணன்தொழும் பரமசிவனேயென்று
பாடிப்படியாரோ-பருவத்தில்
தேடிப்பிடியாரோ

வசனம்.

நந்தனார் சிவபக்தி பண்ணுகவனை நிந்தனைசெய்து இன்னமுஞ் சொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-சுருட்டி-சாப்புதாளம்.

வானோர்புகழுந்தில்லை வனநாதர்வாழுஞ்
ஞானசபையைப்போற்றி நமச்சிவாயமென்று
சொல்லாதவன் கல்வி கல்லாதவன் வெகு பொல்லாதவன்

காசினிபுகழ்சிவ காமிவல்லியைக்கண்டு
பாசமகலும்நெறி பாராதவன்கூத்தப்
பதராச்சு ஆட்டினதராச்சு கிருமிக் கெதிராச்சு

ஆட்டுக்காலேச்சற்றே கேட்டுவாங்கியுள்ள
நாட்டிக்கொள்ளாதவன் மாட்டுக்குவமையென்று
நாடாரோ கண்டுகூடாரோ என்றுந் தேடாரோ

அம்பலவாணனரு கருகில்வந்துகையால்
கும்பிட்டிறைஞ்சாத குருடர்களுக்குத்திற
மதியேது பர கதியேது பண்ணும் விதியேது

நாக்கிருந்துஞ்சிவ நாமத்தைநவிலாமல்
சாக்குப்போக்குப்பேசுஞ் சண்டியவனைக்கால
னடியானே கட்டிப் பிடியானே கையா லிடியானே

வேதாகமநூற்களை விரித்துணர்ந்தாலு
மேகாந்தபக்தியொன் றில்லாதவனுள்ள
முருகாது கள்ளங் கருகாது வெள்ளம் பெருகாது

ஆத்திமதியுஞ்சடை யழகனடியதைப்
பார்த்துகளிக்காத பாவிமனிதர்க்கொன்றும்
பலியாது வினை சலியாது சினம் பொலியாது

பாலகிருஷ்ணன்தேடும் பாதாரசத்தைக்கண்டு
சீலமுடனேயுண்டு செபிக்காதவன்துன்பம்
துலையாது யின்பம் நிலையாது கன்மங் கலையாது

வசனம்.

சிதம்பரம் பாராத கண் படைத்தாரை முகத்தைக் கெடுக்கவந்த புண் படைத்தாரென்று சொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-ஆனந்தக்களிப்பிலே-ஒருபேதம்.

காணாதகண்ணென்ன கண்ணே
வீணாகண்மயிர்க்கண்ணாது புண்ணே (காணா)
சொல்லும்பொருளிறந்த தூரியவடிவதாகி
யல்லும்பகலுமற்ற வானந்தப்பேரொளி (காணா)
பசியாமருந்தளிக்கும் பரமாகசியத்தி
லசையாமலேயாடு மம்பலநாதனைக் (காணா)
ஊராருமறியாம லொளிகண்டுபிசகாமல்
ஈராறுகாற்கொண்டு எழும்பியமண்டபம் (காணா)
அண்டத்துளடங்காத வாசைவலையைப்பூட்டி
பிண்டத்துளடங்கிய பேரின்பதெப்பத்தைக் (காணா)
நாசிநடுவிருந்து நாதனேதானென்று
பேசாமற்றுனிற்கும் பெருமையையொருநாளும் (காணா)
என்னையானறியேனென் றிகழ்ந்திடும்பேயனைத்
தன்னந்தனியனாக்கித் திருவனென்றுரைத்தாரைக் (காணா)

சோற்றுத்துருத்தியிறைதச் சுமந்ததினாலென்ன
ஆத்திமதியுஞ்சடை யழகனமருங்கோயில் (காணு)
சிலக்கமலமுகச் சிவகாமிமனமகிழ்
கோலக்கனகன் றில்லைக் குழகனடியகூத்தைக் (காணு)
பாலகிருஷ்ணன்றொழும் பாதத்தைப்பணிந்தொரு
நாளும்மறவாத நலமிக்கவழிதேடி (காணு)

வசனம்.

பத்தி பண்ணுகிறவன் முத்திபெறுவனென்று சொல்லுகிறார்.

கீர்த்தனம்-இ-ம்-தண்டகம்-ஆதிதாளம்

வேதம்படித்தும் சாஸ்திரங்கற்றும் மெய்யினிற்நீறுபூசுவதும்
ஆதிசிதம்பர தேசிகன்திருவடிக் காளானாலன்றோனந்தம்
உடனேநுலையும் பவபந்தஞ் சொன்னேன்சொன்னேன்சொன்னேன்

ஊனுறக்கமுத லாகியநான்கு முண்டேயுலகில்யாவருக்கும்
ஆணவமலநீத்தார்களறிவா ரகத்தைச்சுருதிக்கொள்ளுவாரோ
ஜகத்தைப்பொய்யாக்தள்ளுவாரோ சொன்னேன்சொன்னேன்

அருந்தவமுனியாகிலும்நல்ல ராசைபொல்லாதறியாரோ
வருந்தப்படுத்திடுமனதைமயங்கி வைத்திடுமன்னமயங்கோசம்
உற்றுப்பார்த்தாலதுநேசம் சொன்னேன்சொன்னேன்

அரவணைகோபாலகிருஷ்ண னல்லும்பகலும்பணிந்தேற்றும்
திருவடிசரணாகதமென்றெண்ணித் தெளிந்தார்களன்றோபரபக்தி
ஒழிந்தாராக்கன்றோவரமுத்தி சொன்னேன்சொன்னேன்

திருநாளைப்போவார்புராணம்.

விருத்தம்.

இப்பரிசாயிருக்கவெனக் கெய்தலரிதென்றஞ்சி
யப்பதியின்மதிற்புறத்தி னாறுதபெருங்காத
லொப்பரிதாம்வளர்ந்தோங்க வுள்ளுருக்கிக்கைதொழுது
செப்பரியதிருவெல்லை வலங்கொண்டுசொல்லுகிறார்.

வசனம்.

இந்தப் பிராமணர்களுடைய வீடுகள் இத்தன்மையாயிருக்க, எனக்கு அவ்விடத்திற்குப் போகுதலரிதென்று பயந்து அந்த ஸ்தலத்

தின் மதிலின்புறத்தில் அணைவுற்று பேரன்பு சமானமில்லாமல் வளர மனமுருகிக் கும்பிட்டுக்கொண்டு சொல்லுதற்கரிய எல்லையை வலஞ் செய்துகொண்டு போவார்.

விருத்தம்.

அம்மையார்தில்லைமாநகர் மருங்கிடையணைந்து
சம்மையிட்டுவிழிதனில் நீர்ச்சொரிந்து
விம்மியேசிவனார் சரிதங்களைவிரித்துக்
கொம்மைகவிட்டவர் பாடியுமானந்தங்கொண்டார்.

வசனம்.

நந்தனார் தனக்கிந்தபாக்கியங் கிடைத்ததென்று கொண்டாடிக்கிறார்.

கீர்த்தனம்-இ-ம்-உசேனி-ரூபகதாளம்.

பல்லவி.

கொண்டாடிக்கிறார்தில்லைக்கோயிலைக்கண்டுதாவித்தாவி (கொ)

அண்டபண்டந்தொழு மம்பலநாதனைக்
கண்டானைக்கண்டுகொண் டோமென் றுமன்றாடி (கொ)
அஞ்சலிகொண்டுகதித்து ஆரகமென்றுஜெபித்து
குஞ்சிதபாதத்தைத்துதித்துக் குரவைகள்பாடிக்குதித்து (கொ)
அங்கம்பரவசமடைந்து ஆனந்தக்கடலெழுந்து
பொங்கிச்சிவமென்றறிந்து புலியதிர்ந்துபணியிருந்து (கொ)
இருகண்ணில்நீர்பெருக இறைஞ்சிடவாடுருக
அருமைச்சிவன்கதிதருக அம்பலவாணனருக (கொ)

இதுவுமது.

தரு-இ-ம்-சௌராஷ்டரம்-ஆதிதாளம்

பல்லவி.

கொண்டாடினாரோ நந்தனார்-கோயிலைக்கண்டு
கொண்டாடினாரோ நந்தனார்

அநுபல்லவி.

அண்டர்மகிழ்ச்சியாலே அரோவென்றுமென்மேலுங் (கொ)

சரணங்கள்.

பண்டுநான்செய்ததே யோகம்-அதனாலும்
கொண்டுவந்தேன்மானிட தேகம்-ஆச்சேசயித்தட்ட
புண்டரீகப்பதுவை போகம்-கண்டேனென்போல
பண்ணிலவர்க்குளதோ போகம்-என்றுதுதித்துக்

கொண்டாடியவர்புகழுங்
கூறுவார்நிதமும் சாகம் (கொ)

வஞ்சமனத்தைநொரு மித்து-நினைத்தொழுத
பஞ்சபாதகப்பே ரெடுத்து-வழுத்தர்களைக்
கெஞ்சியவர்களை யடித்து-வழுவாமலே
கஞ்சமலர்ப்பதங் கொடுத்து-ஆண்டருமென்று
வஞ்சிசிவகாமிதொழும்
மணவாளனைத் துதித்துக் (கொ)

ஒருநாற்புறமதிற் ஜொலிக்க-ஊரெல்லைசுற்றி
வருவார்திரும்புவார் களிக்க-சிரசின்மேலே
இருகைகுவித்துவாள் வெளிக்க-நடேசரைத்
திருநாளைப்போவார் மினக்க-வாசையாலிந்த
பேதமில்லையே புளாக்கக் (கொ)

வசனம்.

இப்படி வீதியைச்சுற்றி சந்நிதியில்வந்து அடி விழுந்தாற்போ லுடல்படியப் பணிந்து புழுதிபடப்புரண்டு ஆனந்தமடைந்து நிர்த்த சபை தெரிந்து தெரிசனம் பண்ணுவார்.

கீர்த்தனம்-இ-ம்-லாவணி-ஆதிதாளம்.

சபாதெரிசனங்கண்டான் நந்தனுஞ் சுபாவமுடனேநின்றான்
சபாதெரிசனங்கண்டான்களித்த பிரபாவமாகியசபாபதியிருக்கும்
சதாகாலமும்வேதங்கள்மொழிந்திடுஞ் சிவாகாரமாய்செழித்துவளர்ந்
தில்லைமூவாயிரமுனிவர்கள்கூடி நல்லும்பகலுமவரவர்நாடும் [திடும்

வசனம்.

தெற்குவீதியினின்று சபாபதியைத் துதிபண்ணுவார்.

கீர்த்தனம்-இ-ம்-செங்கலா-ஆதிதாளம்.

பல்லவி.

ஜெயஜெயதீசா அதிசுந்தராஞ்சிதபாதா ஜெயஜெயதீசா

தில்லையைக்கண்டேன் தேறித்தெளிந்தேன்
எல்லையில்நின்றே னினிப்பிறவேன்காண்

எனக்கினியாரிடு கரும்புபோலினிக்குதுபார்வீடு
ஆசாபாசத்தைவேற வெட்டிமோனத்தின்முறுநாட்டி
வைக்குமிதுயாருக்குங்கிடையாது இந்தசகம்பாருக்குமினியே
சரணாகதமென்றிங்கேவந்தேன் சாமிபாதக்கு [து
உமைபடைந்தேன் ஜெனனதிகளான் மிகநொந்தேன்
வேறொருதெய்வங்களைவருந்தேன் (ஜெய)

தென்றிசைக்கோன்வந்தழைத்திடும்வேளையில்
பெண்டுபிள்ளைகள்குன்றோட்டம்
ஓடித்திரியபெருங்கூட்டம்
நானும்நமனுக்கின்றாட்டம் ஒருநம்பிக்கைதாரும்
நானுனக்கருள்புரிந் தாளுவேனென்று
கனவிலாகிலும்வாருந் தட்டியெழுப்பிக்கவலைகள்தீரும்
அடிமையென்றுமனதுமகிழ்ந்துபாரும்
தில்லைவெளியில்வருவரோசேரும்வும் (ஜெய)

அரகரசங்கரனேபொன் னம்பலத்தாண்டவனே
பரமதயாமூர்த்தி யென்றடிபணிந்தேன் மனங்குளிர்ந்தேன்
ஜாதியில்சின்னவனுனுல்முன் வீதியில்வந்தேனுதாதே த
பாதகஞ்செய்பினுஞ் சிதம்பரமென்று
பகர்ந்தால்பழவினை போகாதோ
தீதில்லாதபெருந் தவத்தோர்வந்தால்
தெரிசனைசெய்தேன் போதாதோ
ஆதிபராபரமாகியவனைக்கொண் டாடுவேன்
பாடுவேன் தேடுவேன் நாடுவேன் (ஜெய)

அபசாரமாகியசமுசாரம் சதாவிஷயகாமாதிகோரம்
உபாயமறிந்தாரதாயேறப்பாரதுஜெகத்சரமாயா
விலாசகற்பிதமிதஜெகம் அனேகசந்தேகமானசனகன்
சிவலோகமென்றுபாவனையால்சிவாராணைம்பெரியோர்கள்
பண்ணியதொழிலிற்பயனறிவார் பாலகிவனைத்தொழுங்காலை
எண்ணியபடியேதவமுறுவார் எனதுனதென் றுமுறையிடுவார்
சமாதிபண்ணியகர்மாதிகிருந்தியடாதேபேதமைகவிடாதேயும்
சபாபதிவெகு விர்பாதிதியுன்
பிரதாபமறியேன் சுபாவப்பறையன் (ஜெய)

விருத்தம்.

வாட்டுவாருடல்வேர்பட தழலிடைவருந்தி
மூட்டுவார்மூலக்கனல் மதிமண்டலமுகட்டில்
மாட்டிறை யச்சியருந்திய புலையன்றன்பனத்து
னாட்டுக்கால்சற்றே தந்திடுமம்பலத்தரசே.

கீர்த்தனம்—இ-ம்-இந்துஸ்தான் காபி-ஆதிதாளம்.

பல்லவி.

தாதாதாயாடியபாதம் தத்தித்தெய் தத்தித்தெய்யென்றாடியபாதம்
ஆதரவாகபதஞ்சலிமாமுனிக் கானந்தநாடகமாடுந்திருவடி
ஆகமவேதபுராணங்களோதிய யோகிகளாலேதேடுந்திருவடி
சிந்தைமகிழ்ந்தருவித்திடவேதிய சுந்தரரஞ்சிதகுஞ்சிதபாதம் (தா)
பாரளந்திடுகோபாலகிஷ்ணன்றுதிப் பாடிப்பாடிப்பணியும்பாதாசம்

வசனம்.

நந்தனர் பிறவிப் பிணிக் கஞ்சித் துதி பண்ணுவார்.

கீர்த்தனம்-இ-ம்-லாவணி-ஆதிதாளம்.

அம்பலவாணாவுன் சரண மடைந்தேனேழை
ஆதரித்தாளுவ தன்பார மல்லவோசொல்லவோ
எடுத்திடுஞ்ஜனனங் கணக்கெழுதத் தொலையாதென்பாடு
இன்னமும்பிறந் திடுவேனோநடேசனேயீசனே
ஆசையெனும்பெருங் காட்டிலேயாற்றமுழுமூடன்
அகலவிடாதேயும் நம்பினேனென் னையனேமெய்யனே
பாரளந்தகோ பாலகிருஷ்ணன் பணியுமலர்ப்பாதம்
பாவியென்னுள் ளூறவேகருணை பாருமேவாருமே

வசனம்.

அம்பலத்திலாடும் நடனத்தை வர்ணித்துச் சொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-சங்கராபரணம்-ரூபகதாளம்.

பல்லவி.

ஆடியபாதா இருவர்கள் நாடும்விநோதா

அநுபல்லவி.

ஆடியபாதா வயனுமாலுந்தினம்
தேடியுங்காணமற் றிரைமறைவாக
தித்திந்திந்தி திந்திந்திமியென (ஆடிய)

வீரவெண்டையம்சிலம்பசைந்திட மேவுஞ்சடையும்பட ஐயன்
சாருந்தொண்டர்கள்மனங்களித்திட சாலோகாதிபதவியுந்
தந்தோந்தந்தோந்தந்தோமென்று (ஆடிய)

வேதமுனிவர்கள்பாடவுஞ் ஜனகாதியோகிகள்
வெகுநாதமெங்கிலுமூடவுந் திருநந்தியுந்தளம்போடவுந்
தகுந்தகுந்தகுந்தகுமென (ஆடிய)

பாலகிருஷ்ணன் துதிகள்செய்திடப் பண்ணவர்கள் பூமாரிபெய்திட
சீலமுள்ளசிவகாமிமகிழ்ந்திடத் திருச்சிற்றம்பலத்தரசனுந்
தாந்தாந்தாந்தாந்தாமென்று (ஆடிய)

வசனம்.

நந்தனார் அடிமைத்திரங் காட்டிச் சொல்லிவாருர்.

கீர்த்தனம்-இ-ம்-தெண்டகம்-ஆதிதாளம்.

அறிந்தறியாமலே செய்தபராத மையாஎன்னை
ஆண்டவனேதில்லைத் தாண்டவங்கள்கடந்திடு மத்தாவுன்சரணம்
பருகியவண்டபகிரண்டவராயா அடிமையுன்சரணம்
நடுவுமாதியுமந்தமுமென்றுமி லாதபிரமனேசரணம்
பொங்குமானந்தக் கடலேவெளியே யறிவின்னறிவேயுன்சரணம்
என்றும்நிஷ்களநிற்குணரூபா வுன்சரணம்
சுருதியின்மகிமைகண்டோரியாத வெளியேயுன்சரணம்
எள்ளுக்குளெண்ணெய்போலெங்குங்கண்ட மகாகுருநாதாவுன்சரணம்
யானைவெட்டிக்கண்டுமறியாதவன் கனகசபேசாவுன்சரணம்

வசனம்.

இப்படி யநேகவிதமாய் கொண்டாடி யுட்புகுந்து தாண்டவம் பாராதகுறைகொண்டு சுவாமியை நானுள்ளே வரலாமோவென்று கேட்கிறார்.

கீர்த்தனம்-இ-ம்-மாஞ்சை-ரூபகதாளம்.

பல்லவி.

வருகலாமோவையா-உந்தனருகில்நின்று கொண்டாடவுநான்

அநுபல்லவி.

பரமகிருபாநிதியல்லவோ இந்தப் பறையனுபாருஞ்சொல்லுவோ
உந்தன்பரமானந்தத் தாண்டவம்பார்க்கவே நானங்கே (வருக)

பூமியில்புலையனாகப் பிறந்தேனே—நான்
புண்ணியஞ்செய்யாம லிருந்தேனே
சாமியுன்சந்நிதி வந்தேனே—பவ
சாகரத்தையு மிழந்தேனே
கரை கடந்தேனே சரண மடைந்தேனே—தில்லை
வரதாப்பிரதாபமும் பாபமுந்தீரவே (வரு)

வசனம்.

இப்படித் திருநாளைப்போவாரென்னுங் கீர்த்திபெற்ற நந்தனார் தில்லையில்வந்து கொண்டாடும் பக்திமார்க்கத்தை ஆதிசேஷனால் வர்ணித்துச் சொல்லப்படாத ஞானபக்தி வைராக்கியசாஸ்திரங்கள் குடியிருக்கும் ஊரின்பேர் சொல்லக்கேட்டறியாத பேதையாகியகோபாலகிருஷ்ணனென்னும் பெயர் கொண்ட என்னால் சொல்லத்தகுமானதோ உளறிக் கூறியதால் பெரியோர்கள் பிழை பொறுக்கக் கடமையென்றுசொல்லி வணங்குகின்றார்.

சிந்து.

இதுதானோ தில்லைப்பதி யென்று எக்களித்தா ராடிக் கெக்களித்தார்-ஐயாவுன்சந்நிதியைக் காண ஆசைவைத்தேன் மிக நேசமுடன்- தெருவில்பொடித்தூளை அள்ளித் தேகமுழுதிலுந் தாகமுடன் - தரித்தார்திருநீறாய் நாலு சாஸ்திரவேதங்கள் பார்த்துணரும்-பெரியோரிருக்குமிடம்.

வசனம்.

நந்தனார் அந்தத் தில்லைத்தலம் இப்படி யிருக்குமென்று சொல்லுகிறார்.

கீர்த்தனம்-இ-ம்-செந்தகடுக்கா-ஆதிதாளம்.

தண்டகம்.

ஆகமங்கள்வேதியர்கள்சிவ னடியார்கள்கூட்டம்-நம
தேகமாகியப்போதுவிளைகின்ற யோகிமுனிகளோட்டம்-பூ
லோககைலாசமென்றதைப் போற்றுவார்களாட்டம்-அதி
வேகமாகவெங்கேயாகிலும் வெளியேபோகவேணுமையே
இங்கிருக்கலாகாதையே இங்கிருக்கலாகாதையே
பாவிப்பறையனிங்கேவரலாமோ சுவாமிதரிசனங்காணலாமோ

பாதகமலங்களைக் தொட்டுப்போமோ
பாவமெனைப்பிரிந்து தொலைந்துபோமோ
இங்கேஆகாதாகா தைதயே
வேள்விசெய்யும்புகைமேலுலக மெழும்பிப்போகுதையே
புண்ணியவான்கள்புரியுந்தவம்
அரகரசிவனென்றாடிப்பாடிக்கொண்டு
பரிவுடனரனைப் பிரதக்ஷணம்வருமிடம் ஆகாதாகாதையே
மணியாடுதுவெகுஜனங்கூடுதுவீதிவலமாகுது திருப்பதம்பாடுது
உள்ளேநடமாடுது பணிவிடைபோகுது பரவசமாகுது
மெத்தபயமாகுது இங்கே ஆகாதாகாதையே
தீண்டாதேஇங்கேவேண்டாதேசம்மா இரையாதேஇங்கேகூவியாதே
என்னைப்பாராதேபடிவருதேயுள்ளே போகாதே யை யாகாதே
யென்பார் ஆகாதாகா தையே

சிந்து.

பெரியோரிருக்குமிடம் இந்தப் பேயனிருப்பதுநாயமல்ல - நானேபறைச்சாதி இல்லை நாதன்றெரிசன மாருமவரப்-பண்ணைப்பிராவி இந்தப் பாரிலிருப்பதுசிரமமே-என்றேநுவந்தோரம் கந்தியங்கி நின்றார்துயர் நீங்கினின்றார்-ஐயாப்பெருங்களைகொண்டு உள்ளங்குழைந்திடவெள்ளமெனக்-கண்ணீர்சொரிய இருகைதொழுதாயவர் மெய்தொழுதார்-கீழேபுரண்டழுதார்.

திருநாளைப்போவார் புராணம்.

விருத்தம்.

சென்றபோழ்தத் திருவெல்லைபணிந்தெழுந்து
பல்குஞ்செந்தீவளர்த்தப் பயில்வேள்விலெழுபுகையும்
மல்குபெருங்கிடையோதுங்கி மடங்களேனுங்கிளைகண்
டல்குந்தங்குலநினைந்தேயஞ்சி யிடைந்தவர்நின்றார்.

வசனம்.

திருநாளைப்போவார் சிதம்பரத்துக்குப்போனபொழுது அதின் எல்லையைக்கண்டு நமஸ்கரித்து எழுந்து விருத்தியாகச் சென்று அக்கினியைவளர்த்தி ஆகுதிசெய்கின்ற யாகத்தால் உண்டாகிய புகையுமிகுந்த பிராமணப் பிள்ளைகளின் நான்குவேதங்களை ஓதும்படியாக அடிக்கடி நெருங்கியிருக்கும் மடங்களையுங் கண்டு சூத்திரனாகிய தம்முடைய குலத்தைநினைந்து உள்ளேபோவதற்குப் பயந்து போகாமல் நின்றுவிட்டார்.

இதுவுமது - விருத்தம்.

நின்றவரங்கெய்தரிய பெருமையினைநினைப்பார்முன்
சென்றவையுக்கடந்தார்சூழெயிறிருவாயிலைப்புக்கார்
குன்றனையமாளிகைக டொறுங்குலவும்வேதிகைக
ளொன்றியமூவாயிரமங் குளவென்பாராகுதிகள்.

வசனம்.

எல்லையில் நின்றுகொண்டிருந்த திருநாளைப்போவார் தான் உள்ளேயடையக்கூடாத அக்கோயிலின் பெருமை நினைப்பாராகி முதலில் அந்த எல்லையைக்கடந்து ஊரைச் சுற்றி யிருக்கும் மதிலின் திருவாசலையடைந்தார் அங்கே திண்ணைகள் பொருந்திய மலைகள்போலுயர்ந்த மூவாயிரம் வீடுகள்தோறும் ஓமங்கள் செய்யப்படுகின்றதென்று சொல்லிக்கொள்ளுவார் சுவாமியைப் பூசிக்கிறதில்லை மூவாயிரவர்களுடைய வீடுகள் மாளிகைகள் மூவாயிரமென்றார் வேதவிதிப்படியாகுதிசெய்யும் பிராமணர்களுடைய வீதியிலே தாம் போகக்கூடாதபடியால் அதைநினைந்து தங்குலத்தை இகழ்ந்து இருக்கலாகாதென்று அவ்விடம்விட்டு ஒரு குளத்தருகில்வந்து சுவாமியைப் பாராத ஜென்மம் ஏன் படைத்தேனென்று தாழப் புரண்டழுவார்.

கீர்த்தனம்-இ-ம்சராசாங்கி--ரூபகதாளம்.

பல்லவி.

இந்தச் சடலம்வந்தவா றேதென்றறிகிலேன் நானேதென்றறிகிலேன்

அநுபல்லவி.

சந்ததமுந்தில்லை யம்பலத்தானை
சிந்தித்துமாயச் சிறைக்கறுக்காமல் (இந்தச்)

சரணங்கள்.

அங்கமலங்களைப் போக்கியேசிவ
கங்கையிலாடிக் களங்கமறாமல் (இந்தச்)

ஆடும்நடனங்கண் டானந்தமாகிப்
பாடிப்படித்துப் பணிந்துகொள்ளாமல் (இந்தச்)

அஞ்சக்கரத்தை யெடுத்துருவேற்றி
வஞ்சப்பிறவி மயக்கறுக்காமல் (இந்தச்)

பாலகிருஷ்ணன்தொழும் பாதத்தைக்கும்பிட்டு
சீலமுள்ளமுக்தி சித்திபெறாமல் (இந்தச்)

பறையனென்றஜென்மம் போகுமோ-பாழ்வினையாலின்னம்
பாரில்வந்துபிறக்க லாகுமோ
அடிமையென்றுவந்தே னுய்யுமோ-ஒன்றையும்நானறியே
னம்பலத்தெய்வமென்ன செய்யுமோ
பார்த்தெல்லாமழிந்து தோணுமோ-கோபாலகிருஷ்ணன்
பணியும்பரமசிவன்கருணை வேணுமோ

வசனம்.

சிதம்பரதெரிசனங் கண்டபேர்க்கு ஜென்மம் இல்லையென்பார்.

கீர்த்தனம்-இ-ம்-ரூபகதாளம்.

பல்லவி.

தெரிசனங்கண்டவர்க்கு மறுஜென்ம மில்லை
வரிசையுடனம்பலவன் வாழ்கின்ற தில்லை(தெரி)

சரணங்கள்.

இரவுபகலிடைவிடாதேகாச பத்தி
இன்பமுறுமானந்தம்பொங்கும் நத்தி
பரவிவருமானருளாலணிமாதி சித்தி
பணிந்துவந்துசிற்றம் பலத்தைவலம் சுத்தி(தெரி)

சொர்ப்பமென்றிவ்வுலகம் தோன்றிவரும் வேதம்
சொன்னததுநின்படியாகும் போதம்
அற்புதமிர்தங்கமொடு தாளவகை கீதம்
அனவரதத்திருநடன மாடிவரும் பாதம்(தெரி)

அல்லும்பகலோயாது அடியார்கள் கோஷ்டி
அரகராவென்றமிர்த பானமதைக் கூட்டி
தில்லைவாழந்தணர்கள் கைபிடித்துக் காட்டி
சிக்கெனவேதிரைதிறந்து பரவெளியைக் காட்டி(தெரி)

நஞ்சுண்டகண்டனுக்குக் கொன்றைமலர் சாற்றி
நல்லதிருச்சாந்தணி அம்பிகையைப் போற்றி
குஞ்சிதவத்தந்தமது மனதிலுற வேற்றுக்
கோபாலகிருஷ்ணன்தொழும் நடராஜ மூர்த்தி(தெரி)

வசனம்.

தனக்கு தெரிசனங்கொடுக்க அம்பலவாணர் எப்போதுவருவா ரோவென்று விசாரப்படுவார்.

கீர்த்தனம்-இ-ம்-செஞ்சுருட்டி.

பல்லவி.

எப்போவருவாரோ எந்தன்கலிதீர எப்போவருவாரோ

எப்போவருவாரோ எந்தன்கலிதீரச்
செப்பியதில்லை சிதம்பரதேவர் (எப்போ)
நற்பருவம்வந்து நாதனைத்தேடும்
கற்பனைகள்முற்றக் காட்சிதந்தாள (எப்போ)
அற்பசுகவாழ்வி லானந்தங்கொண்டேன்
பொற்பதத்தைக்காணேன் பொன்னம்பலவாணன் (எப்போ)

கீர்த்தனம்-இ-ம்-செஞ்சுருட்டி-ஆதிதாளம்.

வருவாரோஅருள் புரிவாரோஎந்தன்
மனதுசலிக்குதுநா னென்னசெய்வேன்
அரகரசங்கர வம்பலவாணனை
ஆதரிக்காதிருப்பாரோ ஒருக்கால் (வரு)

வசனம்.

நான் சின்னஜாதியானதால் வருவாரோ வாராரோவென்றுச
ஞ்சலப்படுவார்.

கீர்த்தனம்-இ-ம்-சுருட்டி—ஆதிதாளம்

பல்லவி.

வாராமலிருப்பாரோ ஒருக்கால் வருவாரோவறியேன்

பாராமலிருப்பாரோ பதஞ்சலிமுனிக்குப்
பாதங்கொடுத்த ஈசனென்று (வாராம)
கனவில்வந்து கழனிமுழுதும்நட்டு
மனதுமகிழ்ந்துஎன்னை வாவென்றுசொன்னவர் (வாரா)
களங்கமறவேஅவர் காலுக்குக்கும்பிட்டு
குளத்தங்கரையில்நின்று கூப்பிடும்வேளையில் (வாரா)
அல்லலறுத்துப்பர மானந்தமேதரும்
தில்லைத்தலத்தைக்கண்டு தெரிசனம்பண்ணியும் (வாரா)

வசனம்.

இதுவரையில் வாராதபடியிருந்தால் இனிமேல் தில்லைத்தலத்தைக்
டாமல் சுற்றிவந்து தேகத்தைத் தள்ளுவோமென்று நிச்சயம்பண்
ணுவார்.

கீர்த்தனம்-இ-ம்-செஞ்சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி.

இன்னம்வரக்காணிலேன் என்னசெய்குவேனவர் (இன்)

இன்னம்வரக்காணிலேன் தில்லை பொன்னம்பலவாணன் பண்ணையும்
நட்டென்னையுமிங்கேவாவென்று சொன்னவர்மறந்தாரோ (இன்)

சொல்லும்பொருளுமிந்தச் சோதியேயகிழ்ந்துவாழும்
தில்லையைவிடாயற்சுற்றித் தேகத்தைமாற்றிக்கொள்வதுநல்லது(இ)

பாலகிருஷ்ணன்போற்றும் பரதச்சிலம்புகுலுங்கக் கோலமுடனட
னங்கண்டேன் குறைகள்தீர்ந்துதென்றுசொல்லவுந்தான் (இன்)

வசனம்.

இப்படிச் சொல்லிக்கொண்டு கண்ணீர்சொரிந்து புரண்டழுவார்.

சிந்து.

கீழேபுரண்டழுவார் என்றுங் கேள்விமுறையில்லையோநாதா
வென்றேதலைகுனிந்தார் எந்தன் வேதனையைக்கண்டுஆதரிக்கும்
தெய்வங்கிடையாதோ பாவி சித்தந்தெளியவிர்த்திதந்து
வாவென்றழையாதோ விண்ணில் வானவர்கள்போற்றுமூனமிலாக்
கனகசபைநடனங் கண்டு காயங்களித்திடநாயடியேன்
வருந்தித்துதியேனோ எந்தன் வாணாளுருகுவீணாயே
அடடா இதென்னஜென்மம்.

வசனம்.

இப்படி புரண்டழுது தான் படுகிற துன்பத்தைக்கண்டு ஆதரி
க்கும்படியான தெய்வம் எங்குங் கிடையாதோவென்றும் இருந்தால்
வந்து என்னை யாதரிக்காதாவென்றும் என் மனது குளிர ஒருவார்த்
தை சொல்லாதாவென்றும் மேலாகிய தேவர்கள் போற்றும்படியா
னவனே என்னுடைய தோத்திரத்துக்கிரங்கி வரக்கூடாதாவென்றும்
உனது நடனசபைக்கு என்னை யழைத்துப்போய்க் காட்டி என்னு
டைய இழிவான குலத்தை மாற்றக்கூடாதோவென்றும் இப்படிப்
பற்பலவாறுகப் பணிந்து துன்பசாகரத்தி லாழ்ந்தார்.

விருத்தம்.

சாதிபேதமும் குணக்குறியானவையுந்தள்ளி
ஆதிபாதியென் றுற்றிநேனன் றிசைதனிலேணந்தும்

மாதவம்புரி தொண்டர்கள்பணிதிரள் மறைக்கக்
கோதிலாவுருக் கொண்டுமிப்பிறவிக்குக் குறையோ.

வசனம்.

இப்படிச் சரணாகதமென்று உன்னை நம்பிவந்து துன்பப்படலா
மா சிவனே சிவனே யென்று பெருங்குரலிட்டு தனக்குச் சென்மம்
போதும் போதுமென்று சொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-நாதநாமக்கிரியை

பல்லவி.

போதும்போதுமையா-எடுத்தஜென்மம்-போதும்போதுமையா

அநுபல்லவி.

மாதவமாரனை வர்கள்புகழுந்தில்லை
வனத்திலனுதினமும் வளருமம்பலவாணா (போ)

சரணங்கள்.

கோத்துநெளியும்புழு ஆத்தைநரம்புகளும்
நாத்தமலங்களூ மூத்திரக்கும்பி (போ)

சந்ததமுமடியேன் யெந்திரம்போலே
வந்தெழுவரையிலும் நொந்துமிருந்தேன் (போ)

கொழுத்தவாணிகள்போலே மிருக்குவிரும்புமென்னை
வயிற்றிலிருந்துபடும் வருத்தமென்னசொல்வேன் (போ)

மாதர்கள்மீதினில் மையல்கொண்டேகிவிடும்
வேதனைகொண்ட வெறும்பயலானேன் (போ)

அண்ணல்கோபால கிருஷ்ணன்பணியுந்திரு
அம்பலமேவும் பொன்னம்பலவாணா (போ)

வசனம்.

ஜென்மமே நஷ்டம் அதிலும் புலையனாகப் பிறப்பது மிகவுங்
கஷ்டம் என்று நந்தனார் சொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-கரகரப்பிரியை—ரூபகதாளம்

பல்லவி.

இந்தஜென்மம்வேண்டாம்இனி எந்தஜென்மம்வந்தாலும்வரட்டும் (இ)

நந்திருடியினில்மந்திரங்களைசொல்லி
வந்தனைகள்செய்துசிந்தைமகிழாத — இந்த

வேதமறிந்தவர்பாதம்பணிந்தவா
போதமடைந்திடாத்தீதடைந்தேன்பாவி — இந்த

பாவிப்பறையனீ தூரவிலகென்று
ஆவிதவித்திடப்பாரிலுளாதிடும் — இந்த

கீர்த்தனம்-இ-ம்-ஆகிரி- ரூபகதாளம்.

பல்லவி.

தில்லைவலஞ்சுற்றினார் சிதம்பரத்தெல்லைவலஞ்சுற்றினார்

அநுபல்லவி.

தில்லைவலஞ்சுற்றினார் தேவருமறியாத
எல்லைவாசல்கடந்திருளறவேண்டி — தில்லை

சரணங்கள்.

சாதிக்குறையத்தானே சந்ததமுநினைந்து
வேதனைகொண்டுள்ளம் வெதும்பியேவாடி
பாதிப்பிறைபணியும் பரமசிவனைக்கண்டு
போதமடைந்து பரிபூரணமாக — தில்லை

மோகவலைக்குட்சிக்கி முழுமூடனாகவே
போகமேயில்லையென்று புத்திகெட்டேனே
பாகனைவேண்டுடல் பாவசமாகியே
ஏகாந்திற்றன்னை விருத்திட்டுச்சுகிக்க — தில்லை

ஓராறுதாண்டியேயுன் மணிக்கோட்டைகள்
சீராறுகாறுத சிதம்பரரகசியம்
ஈராறுநாள்கொண்டு இருந்திப்புலன்றனையும்
போராறுபெருகியே பெருவெளிகாண — தில்லை

வசனம்.

இப்படித் தில்லைத்தலத்தைவிடாமல் சுற்றிவந்தால் தன்னிடம் சுவாமிவருவாரென்றும் மனதைப்பார்த்துச் சொல்லுகிறார்.

கீர்த்தனம்-இ-ம்-யமுனாகல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

வருவார்வருவார்மனமேமயங்காதிருசொன்னேன்சொன்னேன்
வேணதாதருவார்கருணைபுரிவார்திருவம்பலவன்
பாதகியுந்தருவார்சாதிபறையனென்றும்பாரார்நீயதை
உறுதிகொள்ளவேணும்மெய்யன்புடன்
அரகரவென்றொருதரஞ்சொன்னாலும்போதும் வருவார்

வசனம்.

தன்னைஇரட்சிக்குஞ்சமையம் இதுதானென்றுசொல்லுவார்

கீர்த்தனம்-இ-ம-தனாசாரி-ஆதிதாளம்.

பல்லவி.

இதுநல்லசமயமையா ரட்சிக்க இதுநல்லசமயமையா

சரணங்கள்.

இதுநல்லசமயமையா வென்னைரட்சித்தாளும்
ஈமமகேசநடேசசபேசா இதுநல்ல
பாலகிருஷ்ணன்போற்றும் பதங்களைக்காண
சீலமுள்ளமுத்திசேருவதற்கே இதுநல்ல

வசனம்.

இவ்வளவுசொல்லியும் இரங்காமற்போகவேண்டிய தென்னவெ
ன்றுசொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-பியாகு-ரூபகதாளம்.

பல்லவி.

இரக்கம்வராமற்போன தென்னகாரணம்சுவாமி
கருணைக்கடலென்றுபெயர்த்தன் காதில்கேட்டுநம்பிவந்தேன்

சரணங்கள்.

ஆலமருந்தியண்டருயிரை யாதரித்தவனாகீர்த்தி
பாலகிருஷ்ணனபாடித்தினமும் பணிந்திடும்நடராஜமூர்த்தி
பழியெத்தனைதான்செயினும் பாவிகதிதருசிதம்பரமென்று
மொழிகற்றவர்வழிபெற்றவர் கனகசபாபதியிப்படி

விருத்தம்.

அண்டானதிபாவையும் வேள்விகளைமைந்தும்
குன்றிடாதவம் புண்ணியயாகங்குவித்தும்

விண்டிடாமலேயீசன் றனக்களித்தவிவேகம்
மன்றுளாடியபாதத்திலேமனம்வருமே.

வசனம்.

மகாபுண்ணியசாலிகளுக்கு முத்திவருமேயன்றி தனக்குவாராதெ
ன்று சொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-தனுசாரி-ஆதிதாளம்.

சாதியில்தாழ்ந்திடும்புலையனுக்கும்பர கதியோ வேத
சாஸ்திரநான்கினுமோதறியாதது விதியோ
நண்டுநத்தைகளைவதைசெய்தருந்திய தேகம் மன்றுள்
நடனதெரிசனங்காணவென்றாலதி மோகம்
என்தவழியைக்கண்டேறுவது ஞானம சேக
தீசனுக்கன்றேதெரியுமந்தவு பாயம்
சிதம்பரமபோவேனென்றுரையா பாவி இந்த
ஜென்மமெடுத்துவீணாகத்தவிக்குதே ருஷி

வசனம்.

இப்படிநான் ஈனசாதியாயிருந்தபோதிலும் உம்முடைய சரணா
விந்தத்தில்வைத்தபுத்தியை மறந்தவனல்லவென்று சொல்லுகிறார்.

துக்கடா-இ-ம்-மணிரெங்கு-ரூபகதாளம்.

பல்லவி.

எப்படிகெட்டாலுந்தன் பொற்பதமறவேன்காணும் எப்படி

சரணங்கள்.

அற்புதமாகியதில்லையம்பலவாணனேநான்
சொற்பனத்திலுமையன்றி மெய்ப்பொருளாகவும்வேண்டேன்
தப்பிதமெத்தனைசெய்கினும்
கைப்பிடித்து ஆண்டுகொள்ளும் எப்படி

திருநாளைப்போவார்புராணம்.

விருத்தம்.

இவ்வண்ணமிரவுபகல் வலஞ்செய்தங்கெய்தரிய
வவ்வண்ணம்நினைந்துழல வடித்தொண்டாயர்வெய்தி
மவ்வண்ணத்திருமிடற்றார் மன்றுநடங்கும்பிடுவே
தெவ்வண்ணமெனநினைந்தேவே சாறினொடுந்துயில்வார்.

வசனம்.

இந்தப்பிரகாரம் இராப்பகலாக வலம்வந்துகொண்டு உள்ளே போகக்கூடாததன்மை நினைத்துவருத்தப்பட்ட உயர்வுபொருந்திய அடியவர் வேசாறி கரியநிறமுள்ள கழுத்தினையுடையசுவாமி கனகசபையில் ஆடுகின்றகூத்தை எப்படிதரிசிக்கலாமென்று விசனத்தோடும் நித்திரை செய்வார் இப்படி நித்திரை செய்து மறுபடியும் எழுந்து சொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-கண்டா-பியாகு-ஆதிதாளம்.

பல்லவி.

விருதாச்சென்மமாச்சே வந்தும் விருதாச்சென்மமாச்சே
சதாகாலமுமையன் சந்நிதானத்திலிருந்து நிதானம்பெறாமல் (வி

சரணங்கள்.

முத்தியளித்திடுமூர்த்தியைக்கண்டு
பத்தியைப்பண்ணிபதமடையாமல — விரு
பொற்கழலதைப்பொதுவிலிருந்து
நக்காடுமபதந்தனைப்பாராமல — விரு
தில்லைக்கதிபதிதெரிசனங்கொடுத்து
எல்லையிலாவென்றிரங்கியழைத்தும் — விரு

வசனம்.

தனதுபதவிக்கி யோக்கியனல்லவென்று தள்ளுவாரோ கொள்ளுவாரோ அப்படிதள்ளினாலும் தில்லையிலேதானெனதேகத்தைவிடுவதேயன்றி திரும்பிப்போகமாட்டேனென்று சொல்லிப்புலம்புகிறார்.

கீர்த்தனம்-இ-ம்-புன்னாகவராளி-ரூபகதாளம்.

பல்லவி.

தள்ளுவாரோஎந்தனைக் கைக்கொள்ளுவாரோ

சரணங்கள்.

தள்ளிவிட்டால்நான்போகேன் தனித்திருக்குஞ்சபையுமல்ல
அள்ளிவிட்டேனென்னை அம்பலவாணனெருக்கால் — தள்

எனதுனதென்றபிமான மிச்சையறும்நிஷ்டைபண்ணி
மனமிறந்ததூவெளியில் மருவாதபாவியென்று — தள்

நாறுமிந்தப்பொய்யுடலை நாளென்றெண்ணிநான்சுமந்து
தூறுபட்டதுன்பமெல்லாந் துலைக்கத்தெண்ணிக்கொண்டிங்கேவந்தும் — தள்
பாலகிருஷ்ணன்தேடிவரும் பாதமலர்காணேனே
வேல்விழியார்மோகங்கொண்டு விருத்தியற்றமூடனென்று — தள்

## சிந்து.

அடடா இதென்னசென்மமென்று அத்தனதனெல்லைசுற்றிவந்தார் இரவுபகலோயார் இவை ஈசன்கண்டு விசுவாசமுடன் பாலகிருஷ்ண ன்பணியும் திருப்பாதமுள்ள தில்லைநாதனவன் கனவிலுருவாகியது.

## திருநாளைப்போவார்புராணம்.

### விருத்தம்,

இன்னல்தருமிருபிறவியிது தடையென்றேதுயில்வா
ரன்னிலையேயம்பலத்து ளாடுவாரறிந்தினிதில்
மன்னுதிருத்தொண்டரவர் வருத்தமெல்லாந்தீர்ப்பதற்கு
முன்னணைந்துகனவின்கண் முறுவலொடுமருள்செய்வார்,

### வசனம்,

இப்படித்திருநாளைப்போவாரென்னும் நந்தனார் இரவுபகலோயாமல்தில்லைத்தலத்தைச் சுற்றிவருவதால் தேகவருத்தமடைந்து வருத்தத்தினால மயங்கிசோர்ந்து நித்திரையடைந்தார் அந்தநித்திரையிலேநடராஜமூர்த்திவந்து காக்ஷிதந்துசொல்லுவார் எனக்குமிகவும் பிரியமுள்ளநந்தனாரே யும்மிடத்தில் நம்முடையபத்தர்களாகிய வேதியர்களைவரச்சொல்லுவோம் அவர்களமுன் நீர் அக்கினிப்பிரவேசமாகியெழுந்துமறைபடித்த வேதியர்களுடனே சபாபிரவேசம் பண்ணுமென்றுரைபகர்ந்து ஐயன் அந்தர்த்தியானமானார் நந்தனார் கனவில் சாட்சியானதைக்கண்டு களித்து விழித்துத்தெளிந்து அளவில்லாத சந்தோஷங்கொண்டுநன்றியறிந்து சுவாமியைத தோத்திரம்புரிந்துசொல்லுவார்,

### கீர்த்தனம்-இ-ம்-கண்டகம்-ஆதிதாளம்.

### பல்லவி.

சந்நிதிவரலாமோ சுவாமி தெரிசனந்தரலாமோ சந்

இல்லறவாழ்வாம் பணிமுடி
இருந்தேனன்றோ மிகவாடி
அல்லும்பகலுங் கொண்டாடி
அறியேனைகனக சபைநாடி சந்

வீதியிலேசற்றே வந்திருந்தேன்
வேடிக்கைபார்த்துக்கொண் டிருந்தேன்
சாதியிற்றாழ்ந்தவனென் றறிந்தேன்
தனித்திருப்போமென்றிங்கே வந்தேன் சந்

வசனம்,

தான்கனவில்கண்டதுபோல் சுவாமி வருவாரோவாராரோ வென்றுசஞ்சலப்படுவார்,

கீர்த்தனம்-இ-ம்-சாமராகம்-ஆதிதாளம்,

பல்லவி,

வருவாரோவாரருவாரோ எந்தன்
மனதுசஞ்சலிக்குதையோ எப்போ — வரு

திருவாரூந்தென்புலியூர் திருச்சிற்றம்பலவாணன்
குருநாதனுகவந்தெந்தன் குறைதீர்க்கக்கனவுகண்டேன்
இருவினைப்பிணிகளைக் கருவறுத்திடுகிறேன்
பயப்படாதேயென்றுசொல்ல — வரு

மறைநாலும்வழுத்தரிய மகிமைபெருநடராசன்
கழையுறுஞ்சேவடியை நாடிநம்பினவனல்லவோ
அனுதினஞ்சிவசிதம்பரமென்ற
வடிமையேற்கருள்புரிந்திடயிங்கே — வரு

மணிமார்புஞ்செஞ்சடையும் பார்க்கவெகுமையலானேன்
பணியுங்கோபாலகிருஷ்ணனிடம் பரமதயாநிதியல்லோ
பவக்கடலடிக்கடி பெருகுதுவிலக்குமோ
மலைக்குதுகரையேற்ற — வரு

வசனம்,

நந்தனூர் இப்படி அநேகவிதமாய் வருவரோ வாராரோவென்று பலவிதமாகக் கொண்டாடுகிறார்,

திருநாளைப்போவார் புராணம்,

விருத்தம்,

இப்பிறவிபோய்நீங்க வெரியினிடைமூழ்கி
முப்புரிநூன்மார்பருடன் முன்னெவாவெனமொழிந்த
வப்பெரிசேதில்லைவா ழந்தணர்க்குமெரியமை
மெய்ப்பொருளா னருமருளியம்பலத்தேமேவினர்,

வசனம்,

நந்தனுர்கனவிலேவந்து சொல்லிய நடராஜமூர்த்தி தில்லைமூவாயிரம்பேர்கள் கனவிலேவந்துசொல்லுவார் பக்தர்களே எனக்குமிகவும் பிரியமுள்ளவனுகிய திருநாளைப்போவாரென்னும அழகாகியநாமத்தைக்கொண்டு என்னைக்காணவேண்டுமென்று தன்னைக் காணிக்கைகொண்டுசோதியிற்மூழ்ந்தவனென்று மிகவுந்தழைந்துகொண் டிங்கேவரலா

கர்ரதென்றுபயர்ந்துக்கொண்டு தன்னைத்தவிர மற்றதெல்லர் மனித்திய மென்று பத்திபண்ணியடையவேண்டுமென்றுதில்லையைச்சுற்றிக்கொ ண்டு தெற்குக்குளத்தங்கரையில்நின்று ஆடிப்பாடி ஆனந்தங்கொண்டு இருக்கிறா அவனைனைப்போலின்னத்தாதங்கள்ளெல்லோருமபோய் அழைத்துவாருங்களென்றுசொல்லி சுவாமிமறைந்தார் இப்படிக்கண் டகனவை மூவாயிரமபேர்களும் பேரம்பலவாசல்வந்து ஒருவர்க்கொ ருவர் பேசிக்கொள்ளுவார்கள்,

தரு-இ-ம்-சங்கராபாணம்-அடதாளம்,

கண்ணிகள்,

அதிசயமொன்று கேளப்பா தீக்ஷதரே — லென்னேஎன்றன்
யர்த்தாததிரிப்போதி
அதிபாவசமாகத் ததிபாவும்பல — ருன்னே
வானென்கனவில்வந்தா
வாஸ்தவமெனக்குமிந்த வண்ணமாகக்கனவில் — னாடிஉத
வந்துரைத்தாரிக்தே
யாஸ்தமயமாகுமுன் னவாருட்படிக்கு — யோடி
அழைப்பதுத்தமமென்று
அப்போதங்குவந் தவப்பண்ணுதீக்ஷதர் — எங்கோன்
ஆமாமி அதிச்சயந்தான்
செப்பியசொற் செந்திவளர்த்திடச் — சியந்தான்
செய்யவேண்டுமவ
அவசியமென்கிறீர் காரியந்தெரியாமல் — புலையன்சிறந்த
ஆருககடுக்குமோ
தவசிரேஷ்டர்சூழுந் தலத்தினில்வருகத் — லலைவன்
தலைபத்தோ அவன்பந்தா
பத்தியுள்ளவனேபரமனுக்குயிர்தோழன் — காட்சிசிவன்
பதஞ்சலிபுலிப்பாதா
சித்தத்தின்படிசெய்துசெனனங்களைகடப்போம் — சூடசி
தெளிவீர்நீங்களிந்தச்
என்றாரங்குசிவசங்காதீட்சதர் — மேதோகீச்சன்
இன்னமுந்தாமசு
ஒன்றாலுந்திருச்சந்நிதிக்குவருவ — தகாதோ
தொருக்காலுங்கட்டுத்
சொல்லுமென்றாவாமென்றுருங்கட்குச் — தேகமெளிய
சிந்தத்திலுள்ளசந்

அல்லும்பகலுமோயாமேசாஸ்திர
மாராய்பவற்குமேறேதா — சாகரம்

தனும்படியேசிச்சந்தேகந்தெளிவது
தத்தென்றுரைத்த — மொழியே-சம்

பெருங்கூட்டமாகவேகூடிச்சென்றாவர்
வேதமறந்தொரு — வழியே

வசனம்.

தில்லைமூவாயிரவர்கள் சாஸ்திரிமார்களிடத்திற் சந்தேகந்தெளிதல்

விருத்தம்.

மறைக்கிழவரிவ்விதஞ்சென்றார்களங்கே
மனுவிக்கியானிகளாசீர்வாதஞ்செய்து
வந்தகாரியமேதோவுரைப்பீரென்ன
மற்றவரவர்தங்கள்கனவிற்றோன்றி
குறைந்தமதிபுலச்சாதியந்தத்தோன்
கோதிலாநந்தனைப்போனவனல்லன்பன்
கூறுமிவ்வூர்தில்லைவலம்வருவானாளை
கொணர்ந்தவனைத்தீமூழ்கச்செய்தேஅப்பால்
முறையொழிசந்நிதியில்நம்முன்பாக
விடுங்களென்றருளிச்செய்தவர்மறைந்தார்
உணர்ந்தோர்முன்னிறுதெரியச்சொல்லவந்தே
மொழியுமாருத்தரம்யாதென்றார்நீதி
அறிந்தவன்றோமந்தப்படிக்கேசெய்வ
தழகாகுமென்றனர்பின்மகிழ்ச்சியாலே
அந்ததில்லைமாநகரத்தெல்லைச்சுற்றி
யாவோர்க்குமுரைத்தேவியரே.

திருநாளைப்போவார் புராணம்.

விருத்தம்

தம்பெருமான்பணிகேட்டவமறையோரெல்லோரு
மம்பலவர்திருவாயின்முன்பட்சமுடனின்று
எம்பெருமானருள்செய்தபணிசெய்வோமென்றேத்தி
நம்புரிவுபெருகவருந்திருத்தொண்டர்பாற்சார்ந்தார்.

வசனம்.

தமதுபிரானுகிய சபாநாதரிட்ட கட்டளையைக்கேட்ட அவ்வபொ
ருந்திய பிராமணர்களெல்லோரு மம்பலவாணனது கோயிற்றிருவாசல்
மிக

மூன்புகூடி பயத்தோமெம்முடைய ஆண்டவாருள்செய்த வூழியத் தைச்செய்வோமென்று வணங்கி அன்புமேற்பட்டிருக்கும் திருநாளைப் போவாரைத் தில்லைமூவாயிரவர் தேடவருகிறார்கள்,

கீர்த்தனம்-இ-ம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி,

தொண்டனானாலிலமேதில்லையில்வந்துதொண்டனானாலிலமே,

அண்டசராசரமெனக்கும்பழுயனந்து
மன்றுளாடியமன்னவர்க்கடிமை — தொ

சொல்லும்பொருளுமற்றுச்சோதிமயங்கொண்
டல்லும்பகலுமற்றம்பலவாணன் — தொ

அஷ்டதிசையுப்பரிபூரணமாகவே
மட்டில்லாதுவளர்ந்தோங்கியநாதன் — தொ

வாசியடங்கிசிவனைவழிகண்டால்
தேசிகவடிவுடன்தெரிசனந்தருவார் — தொ

பாலகிருஷ்ணன்பணிந்தேத்தியபாதன்
கோலச்சிலம்பணியுங்குஞ்சிதநாதன் — தொ

கீர்த்தனம்-இ-ம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி,

திருநாளைப்போவார்தெரிசனங்காண்கவே
தில்லைமூவாயிரமுனிவர்கள்வருகிறார் — திரு

பக்திவெள்ளமதுகரைபுரண்டோடும்
பரமானந்தக்கடல்மூழ்கநாட்டும் — திரு

அரகரசங்கரசிவனென்றுஞ்சொல்லும்
அநித்யசடத்துக்கபாயத்தைவெல்லும் — திரு

அடியவபாமெத்தப்பெரியவரென்று
அம்பலவாணனருள்விடைகொண்டு — திரு

இதுவுமதுசித்து,

பதம்-இ-ம்-சௌராஷ்டிரம்-ஆதிதாளம்,

பல்லவி.

தேடித்திரிந்தார் — பாருடேரசூர்தம்மைத்
தில்லைமூவாயிரவர் — யாரும்

அநுபல்லவி,

நடுஞ்சனூர்வேதப்பிர தாசனே
நடுங்கைசிவகாமிப்பிரா ணேசனே
ஆடும்பதநடனே சபேசனே
ஆலவாகத்தொழுதேவரும் கேசனேத் தே

சரணங்கள்,

கண்டாமலர்மலர்த் தடமும்-மாதர்களாடித்
கொண்டாளடித்திடு மிடமும்-அன்னமனிக்க
உண்டானைத்தங்கூடு மடமும்-சோரர்பரவுந்
சண்டாளாவாழும்வா ழிடமும்-அன்றிச்சூத்திர
சாதிமுதலானபல வாடையும்-பல்லாண்டு
ஓதியுலாவிவரு மேடை-மனுவிக்கியான
நீதியுணர்ந்தோர்கள் மாடமின்னமும்பல
மாதிரிகளாகுந்திண்ணை மேடை-உன்னதமாகக்
கொங்குமிகுந்தகருவெங்குமணத்திடுஞ் சோலை-கருப்பஞ்சோலை
தங்குமுயர்ந்தகதித்திடும்வாழையின் சோலை-தாழையின்சோலை
தெங்குமிலுப்பையுமொன்றுபொருந்திய சோலை-காவினிற்சோலை
அங்கமதானபலாக்கமுஞ்சோங்கிய சோலை-மற்றுள்சோலை
எங்குஞ்சுற்றிப்பார்த்துமறையோர்கள் தங்கள்தங்களங்கமேங்க
நதியிதழும்
பொங்காவணித்தசிவசங்கரன்கிருபை யிதன்றே யோங்க
கூக்குரலிட்டுங்
சன்னையபுறச்சென்னியிற்காங்களைக் குவித்தெங்களைத் தாங்க
மனமுவந்து
இங்கேயெங்கள்பங்கினிலிருந்து மேழைவருத்தம் நீங்க
கிருபைசெய்தற்கு
உன்னைத்தேடினென்றுஉவந்துக்கொண் டாடி
உரியவேதமந்திரதிகள் பாடி
முன்கூடுஞ்சொன்னநந்தனூர்வர நாடி
மூனுங்கோடைக்காற்றெனவினாந் தோடி
தேடித்தேடித்திரிந்தார் பாரும் நந்தனூர்தம்மைத்

வசனம்.

இப்படிப்ரகாரம் தில்லைமூவாயிரவர்களுந்தேடி அலுத்து ஓரிடத்திலேயாவருங்கூடி சுவாமியைத்துதிசெய்கிறதென்று நிச்சயஞ்செய்து தோத்திரஞ்செய்கின்றார்கள்,

௬௫-இ-ம்-கல்யாணி-அடதாளம்.

பல்லவி.

உனதுமகிமையை யொருவரறிவார்களோ
உலகிலுள்ளோரையனே

சரணங்கள்.

கனவிலேவந்தெங்களுக்குச்சொன்ன — அந்த
காரணமறிந்ததிக்காலையிலே — யெழுந்த
இனத்தார்நாங்கள்யாருமிசைந்தொருமித் — திந்த
எல்லைமுழுதுஞ்செடியினைத்தேடியெங்களுக் — கந்த
இணையில்லாநந்தனொருவனு — மகப்பட
வில்லையென்னசெய்வோம் — ஸ்திரப்பட-உள்ள
அடையவர்திரிபுரமனலாகவே — முடித்த
வன்பாகமானமழுவுங்கையிலே — பிடித்த
விடப்பாகனைகாளிவெட்கும்படி — நடித்த
மெய்யாதுயர்தவிர்ததாளையாதென்றே — படித்த
வாறுநீயறிந்தருள்செய் — ஐயனே
வளசுகர்புதுசரணாத் — தாய்யனே-உன்னை
அன்னைசிவகாமியனுதினம்வளர் — தில்லை
யம்பொனசபைவருவோர்க்கொருதாய — தில்லை
உனையன்றியிலகத்துக்குப்போநருதே — யில்லை
யுத்தமனேயெங்கடகுரியதுணையு — மில்லை
ஓதுநந்தனார்தம்மைவரச் — செய்யும்
வழிவிளைதவிர்த்தவர்க்குஅருட் — செய்யும்-உன்ன

வசனம்,

இவ்விதமாகச் சுவாமியைத்துதித்துத் தில்லைமூவாயிரவர்களனை வரும் நந்தனாரைத்தேடியலைந்துவருமார்க்கத்தில் ஒதுப்புறமாக நின் றுக்கொண்டிருந்த நந்தனார் வேதியனாக்கண்டு தூரயிலகிநின்று தலை வணங்கிச்சொல்லுவார்.

விருத்தம்,

திட்டமுடனடிபணிந்துமனமொடுங்கித் தவம்புரியுந்தில்லைமன்று,
ளொட்டியநடராசன் கனவின்கண் சொன்னமொழி நம்பிக்காணு

இட்டமுடன் திருநாளைப்போவாரிடம்வேதியர்களேகுமரோது, கிட்டி
நெருங்காதையுமென்றேவிலகியோர்வார்த்தைகேளீரென்றூர

கீர்த்தனம் இ-ம்-செங்கல்ரா-ரூபகதாளம்.

பல்லவி,

கிட்டநெருக்கிவருகாதே சுவாமி-காதில்
கேட்டபேர்க்குபாவமவரு மெனஅசென்மம்பூமி-கிட்
கிட்டர்புரமூர்த்தில்லைதனில் செழித்துவாழும்வேதியர்கள்
இஷ்டமிதுவல்லவேயென்றுசொல்லவேணுமோபுலையன்-கிட்
உலகினில்கடைச்சாதியெந்தனுக் குவமையாருமில்லையே
பலவிதஅஷடகருமஞ்செய்து பாரில்வந்தபுலையன்-கிட்
வேலைசெய்துவுடம்புவளர்க்க வேணுமந்தாயடியேன்
தோலுமெலும்புமுதுகினில்சுமந்து அலையுமபுலையனையே-கிட்
செத்தமாடிழுப்பதெனது வகம்படித்துமெயல்லை

வசனம்,

இப்படிவணங்கிச்சொல்லிய திருநாளைப்போவாரைப்பார்த்துவே
தியர்கள்சொல்லுவார்கள்.

கீர்த்தனம்-இ-ம்-சுருட்டி-ரூபகதாளம்.

பல்லவி.

சாதியிலுயர்ந்தாலென்ன இந்தப்பேரும்பெருமையுமில்லையே
சாதிப்பேருகொண்டதாலே சங்கரனருலகிலவந்து
ஆதரவுடனைரங்களீய்ந்து அழைப்பாரோபார்ப்பாரோசேர்ப்பாரோ
அளிபெருகவேயீசன்கழலை யறிவிலுன்னியடிபணிந்து
தெளிந்தியானமுத்திதேடுமோ நாடுமோகூடுமோசாதியில்

வசனம்.

இப்படிச்சொல்லியபின் தாங்கள்வந்தகாரியம்பேசுவார்.

திருநாளைப்போவார்புராணம்.

விருத்தம்.

ஐயரேயப்பவாருடா ரவியப்பொழுதணைந்தோம்
வையவழுமைகொந்துமக்குத் தரவேண்டியெனவிளம்ப
மையுமெனைத்திருத்தொண்டர் மானும்மேனைத்தொழுதார்
தெய்வமதருமனிவர்களுந் தியமைத்தோமெனமொழிந்தார்

வசனம்,

ஐயரேசருடையகட்டளையால் இப்போது வெல்விதமாகிய
அக்கினியைமூட்டி உமக்குஅதில்முழுகும்படி கொடுக்கவந்தோமென

எந்தனென்றெதன்றெந்தவேனையுமாயுஞ்
சிந்தைநழுவிற்றேசேர்தவனென்று  சிந்தைநழுவிற்றே
தென்றுநதமீழ்ப்பாடியுள்ளமுருகியுள்ளில்
கள்ளங்கருகிற்றேகருத்திலெட்டா  வெள்ளம்பெருகிற்றே
ஆசைவலையைப்போட்டுமோசப்படுத்துஞ்சில
பாசங்குலைந்தாரோஅளவிடா  இலேசந்தொலைந்தாரோ
பெண்ணாரிடுமொழுக்கொன்று விதனச்சடைத்
தண்டுந்தணிந்தாரோகருணைபொங்கு  கண்ணுலணைந்தாரோ
அடுத்துவந்தவனென்றுபிடித்தபேய்களையோட்டி
தடுத்தாளக்கொண்டாரோயாமபதங்கொடுத  தாளக்கண்டாரோ

திருநாளைப்போவார்புராணம்.

விருத்தம்,

மறையவர்கள்மொழிந்ததற்பின் றென்றிசையின்மதிபுறத்துப்
பிரியுமிஞ்சுந்திருவாயின் முன்னுகப்பிஞ்சகர்தன்
இறையருளால்மறையவர்க ணெருப்பமைத்தகுழியேத்தி
இறைபவர்தான்மனங்கொண்டே பெரிகுழல்வலங்கொண்டார்.

வசனம்,

அப்படிபிராமணர்சொல்லினபின்பு தெல்திசையிலுள்ள மதிலின்புறத்திலே சந்திரனை அளந்துபோகும்படி உயரந்திருக்கும் திருகோபுரவாசலுக்குமுன்னே சுவாமியின் கிறைந்தகிருபையோடுங்கூடிய கட்டளையால் பகர்ந்திருக்கின்ற நெருப்பின்குழியை அடைந்து நடேசருடைய திருப்பாதத்தை மனதில்தியானித்து அக்கினியைச்சுற்றி வலமாகவந்தார்.

இதுவுமது.விருத்தம்.,

கைதொழுதுநடமாடுங் கழனுன்னியழல்புக்கார்
எய்தியவம்பொழுதின்க ணெரியின்கணிம்மலமாய்ப்
பொய்தகையுமுருவொழித்துப் புண்ணியமாய்முனிவடிவாய்
மெய்திகழ்முந்நூல்விளங்க வேணியனார்முடிகொண்டான்.

வசனம்.

கையாற்கும்பிட்டுநடனஞ்செய்கின்ற நடேசரதுதிருப்பாதங்களை மனதில்உறுதியாய்நினைந்து அக்கினியில்புகுந்தார் அப்படிச்செய்தபோது அந்தநெருப்பில் இந்தஉலகம்பந்தமாகிய நிலையில்லாத உடலத்தையொழித்துப் புண்ணியஞ்செய்கின்ற பெருமைபொருந்திய பிராமணமுனியின் வடிவாய்த் தேகத்தில் பூநூல்விளங்கச்சடைமுடியோடும்யெழுந்தார்.

கீர்த்தனம்-இ-ம்-மோகனம்-ஆதிதாளம்.

பல்லவி,

யாகோற்பவமானா ரந்தனார் அரனருளால்
யாகோற்பவமானார்

அநுபல்லவி,

சிவனருளாற்ற
சிறந்தமேதிக
தவனுருவனேக
தன்னைக்கொண்டதே
தபனனேடுவுயர்
மெவருங்காந்தருவ
கைகையச்சிரமேற்
கனகசடையைத்
செய்யகுண்டத்திற்
செனித்துதேவர்புகழ்
சித்தியாகியபதம்
பத்தியாய்த்தொழும்
காதிற்குண்டல
கதித்தமார்பிட
ஓதுஞ்சடைகள்
ஒடியேவினை
ஏதமற்றசதுர்
நீதவேதியர்கள்

வாக்கியம் சித்தத்திலெண்ணி
சிலாக்கியம்
பாக்கியம்
யோக்கியம்
கவனமேவிவரு
மெவருங்கண்டுதொழ யாகோ
பதித்து சிவசிவயென்று
துதித்து
குதித்து கதிரவன்போல்
நடித்து
மூற்றும்பாம்புபுலி
பதத்தைக்கண்டுதொழ யாகோ
மிலங்க முப்புரிநூலுங்
மிலங்க
துலங்க அவனைவிட்டு
கலங்க
வேதமோதிவரும்
போதுமென்றுதொழ யாகோ

திருநாளைப்போவார்புராணம்.

விருத்தம்,

செந்தீமேலெழும்போது செம்மலர்மேய்வதெழுந்த
அந்தணன்போற்றோன்றினு ரந்தரதுந்துமிநாதம்
வந்தெழுந்ததிருவீதிம்பில வானவர்மகிழ்ந்தேபார்த்துப்
பைந்துணர்மந்தாரத்தின் பனிமலர்மாரிகள்பொழிந்தார்

வசனம்,

இவர்நமெருப்பில்நின்றும் எழுந்தபொழுது செந்தாமரைப்புஷ்ப
த்தின்மேல் உதயமாயெழுந்தருளிய பிர்மாவைப்போல பிரகாசித்தார்
பெருமைபொருந்திய ஆகாசத்தில் அந்தரதுந்துமியின் கோஷமா
டின

னது உண்டாயிற்று தேவர்கள் சந்தோஷமாய் ஆரவாரித்து அழகாயிருக்கின்ற கற்பகவிருட்சத்தின் குளிர்ச்சிபொருந்திய மலர்களை வருஷமாகச்சொரிந்தார்கள்.

இதுவுமது-விருத்தம்.

திருவுடையதில்லைவாழந்தணர்களுந்தொழுதார்
பரவரியதொண்டர்களும்பணிந்துமனங்களிப்பயின்றார்
அருமறைசூழ்திருமன்றுளாடுகின்றகழல்வணங்க
வருகின்றார்திருநாளைப்போவாராமறைமுனிவர்

வசனம்.

ஞானசம்பத்தையுடைய தில்லைவாழும் பிராமணர்கள் கைகூப்பினார்கள் பரவுதற்கரிய மற்றைச்சிவபக்தர்களுந் தொழுது மனதில் களிப்படைந்தார்கள் வேதங்கள் முழங்குகின்ற கனகசபையில் ஆடுகின்றபாதத்தை வணங்கும்பொருட்டுத் திருநாளைப்போவாராகிய ஒருவேதமுனிவர்வருகையின ஆனந்தத்தாண்டவத்தை வருணித்துச் சொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-தேசிகதோடி-ஆதிதாளம்.

பல்லவி.

தாதெய்தெய்யென்றுவோரவர்
தத்திததெய்தத்திந்தெய்யென்றுவோர்
ஆதிபராமாகியசித்து
ஆனந்தவொண்டொருகாலையெடுத்துத் — தாதெய்
அண்டசராசரமெங்குநடுங்க
ஆதிசேடனார்முட்கவொருங்க — தாதெய்
சிலம்பொருந்தியமுனிவர்கொண்டாட
திங்களைச்சூடியசெஞ்சடையாட — தாதெய்
பார்புகழுந்தில்லைச்சிதம்பரநாதன்
பாலகிருஷ்ணன்பணிந்தேற்றியபாதன் — தாதெய்

கீர்த்தனம்-இ-ம்-பந்துவராளி ரூபகதாளம்.

பல்லவி.

குஞ்சிதபாதத்தைத்தாரும் மனசஞ்சலப்பாவத்தைத்தீரும்

அநுபல்லவி.

செஞ்சிலம்பசையக் — கனகசபைதனில்
ஜெணுதக்கதஜெணுதக்கமி — இமிதத்தோமென்றாடிய-குஞ்

சரணங்கள்.

நெஞ்சிற் கவலையை — யாற்றுமம-இந்த
வெந்தப்பிறவியை — மாற்றும்-காரணமே
வஞ்சிசிவகாம — வல்லிமகிழ்ந்திடும்
[illegible] தகஜெந்தரிகிட தக்கிட தோ — மென்றாடிய-குஞ்

சரணமென்றிங்கோரான் வந்தேதன்-ஜன
மரணத்தில்மிக நொந்தேதன்-அந்த
கரணங்கல்மிஷங்கள் போக்கியேகாத்திடும்
இந்திரர்வானவர்மாமுனி வந்துதிதந்துதிசெய்திடும்-குஞ்

பாலகிருஷ்ணன்தொழும் பாதா-மூத்தி
நால்வர்க்குதவிய நாதா-யெக்தன்
மேலேகிருபைசெய்து வெற்றியளித்திடும்
அந்தனேகர்த்தனேசுத்தனேயித்தனே கீர்த்தனஞ்செய்திடும்-குஞ்

கீர்த்தனம்-இ-ம்-யமுனாகல்யாணி-அடதாளம்.

பல்லவி.

ஆனந்தக்கூத்தாடினார் அம்பலந்தனிலே பொன்னம்பலந்தனிலே

அநுபல்லவி.

ஆனந்தக்கூத்தாடினார் அயனும்மாலும்பாடினார்
அந்தரங்கமாகச் சிந்தித்தபேர்க்கருள்
தந்தோந்தரதோமென்று தொந்தோந்தோமென்று ஆன

சரணங்கள்,

பதஞ்சலிமா முனியைநோக்கிப்
பார்த்தபேர்கள் குறையைப்போக்கி
இரிமதிதமென் நறிவைநீக்கி
ஏகமாக காலைதூக்கி-ஆன

மத்தளதாளா மதிரமுழங்க
வளரும்பிறமத கணங்களிலங்க
தத்தமிதக்கிட தோமென்றிலங்க
சடையுந்துலங்க சதங்கைகுலுங்க-ஆன

பாலகிருஷ்ணன் பணியும்பாதன்
பார்த்தபேர்கள் வரப்பிரசாதன்
ஞாலமபுகழுந் சீலபோதன்
சுந்தரர்தூதன் அம்பிகைபாதன்-ஆன

வசனம்.

இப்படியாடிய தாண்டவதரிசனங்கொடுக்க இன்றைக்குத்தான் சித்தமிரங்கிற்றென்று சொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-யமுனாகல்யாணி ஆதிதாளம்.

சித்தமிரங்கிற்றோ யான்முன்செய்ததவ முற்றிற்றோ
அத்தாபரிசுத்தா வுன்னடல்காணவந்தேனே
எனைபோலயாருண்டோ சொன் இதுவேசமயம் முன்னடல்காணவந்தேன்

சாதிமுறைபோக்கும் என்னைச் சதுர்மறையோனுக்கும்
போதாசாதாவுன் னுடல்காணவந்தேன்
என்னையாண்டுகொள் இதுவேசமயமுன் னுடல்காணவந்தேன்
பாலகிருஷ்ணன்போற்றும் பாதா பதஞ்சலியாபோற்றும்
சீலா திரிசூலாவுன் னுடல்காணவந்தேன்
என்னையாண்டுகொள் இதுவேசமயமுன் னுடல்காணவந்தேன்

விருத்தம்.

கனவிலுருவாகி வந்துகாட்சிகொடுத்துக் கடாட்சித்தபின்னெரியினி டைமூழ்கி வெகுயின்பம்பெருகிய வன்பருடன் வேதமுனிவடிவாய்த்தி ல்லைவேதியர்கை தொழுதாதரவாம் அங்கம்புளகிதமாய்ச் செம்பொன்

வசனம்.

திருநாளைப்போவாராகிய முனிவர் அக்கினியில குளித்தெழுந்து கனகசபையில்வந்து மனமுருகி ஆனந்தம்பெருகி எம்மாண்டவராகிய நடேசமூர்த்தியைத் தோத்திரஞ்செய்கின்றது.

தேவாரம்.

பாளையுடைக்கமுகோங்கிப் பன்மாடநெருங்கியெங்கும்
வாளையுடைப்புனல்வந் தெறிவாழ்வயற்றில்லைதன்னு
ளாடையுடையுடைக்கழற்சிற்றம்பலவனுடல்கண்டாற்
பீளையுடைக்கண்களாற் பின்னைப்பேய்த்தொண்டர்காண்பதென்னே

பொருவிடையொன்றுடைப் புண்ணியமூர்த்திதன்
னுருவுடையன்மலை மங்கைமணாளனுலகுக்கெல்லாந்
திருவுடையந்தணர் வாழ்கின்றதில்லைச்சிற்றம்பலவன்
றிருவுடையைக் கண்டகண்ணான்மற்றினிக்காண்பதென்னே

தொடுத்தமலரோடு தூபமுஞ்சாந்துங்கொண்டெப்பொழுது
மடுத்துவணங்குமயனொடு மாலுக்குங்காண்பரியான்
பொடிக்கொண்டணிந்து பொன்னாகியதில்லைச்சிற்றம்பலவ
னுடுத்ததுகிலகண்டகண்ணை கொண்டுமற்றினிக்காண்பதென்னே

வைச்சபொருணமக் காகுமென்றெண்ணிநமச்சிவா
யச்சமொழிந்தேனினி தில்லையம்பலத்தாடுகின்ற
பிச்சன்பிறப்பிலிபேர் நந்தியுந்தியின்மேலசைத்த
கச்சினழகுகண்டாற் பின்னைக்கண்கொண்டுகாண்பதென்னே

நெஞ்சின்றநீலமலர்கின்ற தில்லைச்சிற்றம்பலவன்
மஞ்சின்றவொண்கண மலைநன்கண்டுமகிழ்ந்திற்க
நெஞ்சின்நெறியும்விளக்கொத்த நீலமணிமிடற்றான்
நெஞ்சினறவாடல்கண்டாற் பின்னைக்கண்கொண்டுபார்ப்பதென்னே

ஊனத்தைநீக்கியுலகறிய வென்னையாட்கொண்டவன்
தேனொத்தெனக்கினியான் றில்லைச்சிற்றம்பலவனெங்கோன்
வானத்தவருய்யவன் னஞ்சையுண்டகண்டத்திலங்கு
மேனத்தெயிருகண்டாற பின்னைக்கண்டுகொண்டதென்னே

தெரித்தகணையாற் றிரிபுர மூன்றுஞ்செந்தீயின் மூழ்க
வெரித்தவிறைவனிமையவர் கோமானிணையடிக
டரித்தமனத்தவர்வாழ்கின்ற தில்லைச்சிற்றம்பலவன்
சிரித்தமுகங்கண்டகண் கொண்டுமற்றினிக்காண்பதென்னே

திருக்கமிசைத்தூத்தன் றேருள்வலியுன்னித்தடவரைய
வரைக்கணாலெடுத்தாரப்ப மலைமகள்கோன்சிரித்து
வரக்கன்மணிமுடிபத்து மணிதில்லையம்பலவ
னொருக்கமித்தவிரல்கண்டகண் கொண்டுகாண்பதென்னே

வேற்றாகிவிண்ணாகிநின்றாய்போற்றி மீளாமேயாளென்னைக்கொண்டாய்போற்றி, யூற்றாகியுள்ளேயொளித்தாய்போற்றி வேலாதசத்தத்திலொளியேபோற்றி, யாற்றாகியங்கேயமர்ந்தாயபோற்றி யாறங்கநால்வேதமானாய்போற்றி, காற்றாகியெங்குங்கலந்தாய்போற்றி கைலமலையானேபோற்றிபோற்றி

சுற்றுமமரர்சுரர்பதி நின்றிருப்பாதமல்லாற்
பற்றொன்றிலோமென்றடைப் பரவையுணஞ்சையுண்டாய்
செற்றங்கனங்களைத்தீவிழித் தான்றில்லையம்பலவன்
நெற்றியிற்கண்டகண் கொண்டுமற்றினிக்காண்பதென்னே

சித்தெழுந்த செழுங்கமலத்தன்சேவடிகள்
மைத்தமனத்தவா வாழ்கின்றதில்லைச்சிற்றம்பலவன்
முத்தும்வைரமும் மாணிக்கந்தனுளடங்கியதூவு
மத்தமலர்க்கண்டகண் கொண்டுமற்றினிக்காண்பதென்னே

பிச்சாடல்பேயோடுகந்தாய்போற்றி பிறவியறுக்கும்பிரானேபோற்றி, வைச்சாடலென்றுமுகந்தாய்போற்றி மருவியென்சிந்தைபுகுந்தாய்போற்றி, பெச்சாகபுரமூன்றுமெரித்தாய்போற்றி போகாதென்சிந்தைபுகுந்தாய்போற்றி, சச்சார்ந்தமனைசந்தாய்போற்றி கைமலையானேபோற்றிபோற்றி

மருவார்புரமூன்று மெரித்தாய்போற்றி மருவியென்சிந்தைபுகுந்தாய்போற்றி; யுருவாகியென்னைப்படைத்தாய்போற்றி யுள்ளாவிவாங்கியொளித்தாய்போற்றி, திருவாகிநின்றநிமமேபோற்றி தேசம்பரவப்படுவாய்போற்றிபோற்றி

வானத்தார்போற்றுமருந்தேபோற்றி வந்தென்றன்சிந்தைபுகுந்தாய்போற்றி, யூனத்தைநீக்குமுடலேபோற்றி யோங்கியழலாய்நிமிர்

வசனம்,

தமக்குமுன்னிருந்த உடலமாறியமாசுதீரும்பொருட்டு அக்கினியாகிய திருமஞ்சனமாடியெழுந்து குற்றமற்றபிராமணமுனிவராகிதேசருடைய திருவடியையடைந்தவராகிய திருநாளைப்போவாருடையபதத்தைப்புகழ்ந்து தீவினையாகிய கயறுஅறும்படி தில்லை மூவாயிரவர்கள் போற்றிசெய்துக்கொண்டிருந்தார்கள்.

வாழிவிருத்தம்.

பங்கயமாதர்வாழி பார்மகளுமையாள்வாழி
செங்கண்மாலயனும்வாழி தேவர்கள்முனிவர்வாழி
தங்குநான்மறைகள்வாழி தாரணியரசர்வாழி
பொங்குநல்வல்லோர்வாழி போதமெஞ்ஞானமும்வாழி.

மங்களம்,

ஓடிதரு-இ-ம்-அசாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

திருநாளைப்போவாருக்கு ஜெயமங்களம் எங்கள்
தில்லைமூவாயிரவர்க்கு சுபமங்களம்

அநுபல்லவி.

இருடிகள்முனிவர்க ளீந்திரசயமென
விருசுமுடிமிசை மருதந்துதிசெய்கன்
பரவும்பாசப் பிரமங்கள்துதிக்கிடும்
பாமனுமெம் பலத்தினில்கதிக்கிடும்-திரு

சரணங்கள்.

திருவாசகமுந்திருக் கோவைபாடினவர்க்கும்
சீர்காழியிலுதித்துச் சிறந்தசம்பந்தருக்கும்
ஒருமாதிடந்தூதுக் குகந்துவிடுத்தவர்க்கும்
உருவொப்பிலாத்திரு நாவுக்கரசருக்கும்
உரியமறைக்கு மூயற்கலைகட்கும்
உரகபதிக்கும் உவணபதிக்கும்
ஓதுசங்கிராகுரியர் முனிவாகளுக்கும்
தீதிலாதபா வலர்முதலானவர்க்கும்-திரு

நந்தனார்திவ்வியசரித்திரக்கீர்த்தனை

முற்றிற்று.



உ

சிவமயம்.

# சிதம்பரக்கும்மி.

விநாயகர் துதி.

சீர்மேவுதில்லையம்பலத்தில்-அன்பு
சேரக்கும்மிதமிழ்பாட
கார்மேவுமேலக்கோபுரவாசல்
கற்பகப்பிள்ளையார்காப்பாமே — 1

மூக்குறுணிவிநாயகர் தோத்திரம்.

சர்க்கரைமோதகதேங்காயுங்-கொண்டு
சந்நிதிமுன்பாகத்தான்படைத்து
மூக்குறுணிப்பிள்ளையாரைவேண்டி
முழங்கிக்கும்மியடியுங்கடி. — 2

சுப்பிரமணியர் துதி.

கோலமயிலின்முதுகேறி-வந்து
கும்பமுனிக்குவருள்செய்யும்
பாலசுப்பிரமண்யன்ஜீராட்சாத்தைப்
பாடிக்கும்மியடியுங்கடி. — 3

கன்னாசேவிக்குக்கைகூப்பி-யாருங்
கையிலெடுத்துள்ளேபாணம்பண்ணி
தங்காமம்சிவகாமிசந்நிதி
சார்ந்துகும்மியடியுங்கடி. — 4

கற்றிவர்க்குச்சிலையைப்பாருங்கடி - நல்ல
சோதிமயக்கம்பமானதடி
தத்துவங்கள்தொண்ணூற்றாறுங்கூடிச்
சபைந்தசபையைப்பாருங்கடி — 23

பாவிகள்கண்ணுக்குச்செப்போடு - உற்றுப்
பார்த்தால்பத்தரைமாற்றுத்தங்கம்
கோனைப்பாடியமாணிக்கவாசகர்
கோவிலைப்பாருங்கடி. — 24

அஞ்செழுத்தாலேமதிலுமுண்டாம் - பர
மானந்தக்கும்பமுமங்குண்டாம்
அஞ்செழுத்துப்படிக்கப்பாலேபிரம்
மானந்தத்தாண்டவம்பாருங்கடி. — 25

கோடியுகந்தவஞ்செய்தாலுமிந்தக்
கோயிலைப்பார்க்கமுடியாது
ஆடியபாதத்தைக்கண்டோருக்கிணை
யாரென்றுசொல்லுவோம்பாருங்கடி. — 26

நெற்றியிலேதிருநீறணிந்துஎன்றும்
சிவக்களமாகிச்சிற்சபையில்
தித்திக்கவேசிவநாமத்தைப்பூசிக்குந்
தீட்சதர்கூட்டத்தைப்பாருங்கடி. — 27

வெட்டவெளியிற்றிரைதிறந்துயார்க்கும்
வேதியர்தீபமுங்காட்டிடவா
சட்டமுள்ளசிவசிதம்பரமென்று
சாய்ந்துக்கும்மியடியுங்கடி. — 28

இல்லைவெளியைக்கண்டேண்டி - அங்கே
தேகம்பரவசங்கொண்டேண்டி
அல்லலறவாசலின்றேண்டிமிக்க
ஆனந்தத்தாண்டவம்பாருங்கடி. — 29

ஆகாசலிங்கத்தைக்கண்டேண்டி - அங்கே
யாவருமறியாமல்நின்றேண்டி
ஏகாந்தமாகவிருந்தேண்டிமன
தேசங்குலைந்துபாருங்கடி. — 30

சித்தஞ்சிதம்பரமாச்சுதடி முன்
செய்தவினையெல்லாம்போச்சுதடி
சுத்தப்பிரம்மமயமாச்சுதடி யதைச்
சொல்லத்தெரியுமோபாருங்கடி. — 31

சாதிபேதங்களற்றேண்டி - இந்தச்
சாஸ்திரமானதைவிட்டேண்டி
போதமயக்கங்கொலைத்தேண்டியின்று
புகுந்துகும்மியடியுங்கடி. 32

நாடுந்தைப்பூரணபூசத்திலே - ஏக
நாயகன்றன்குருவாரத்திலே
ஆடியநாடகம்பாம்புபுலிகளுக்
காமென்றுகும்மியடியுங்கடி. 33

சஞ்சிதகர்மங்கள்விட்டேண்டி - பல
சாகரத்தையொழித்திட்டேண்டி
குஞ்சிதபாதத்தைத்தொட்டேண்டிமனங்
கூர்ந்துகும்மியடியுங்கடி. 34

சொல்லும்பொருளையுமற்றுமே - முன்
துன்பமனைத்துமொழித்தாயே
அல்லும்பகலையுமற்றுமேதில்லை
யானந்தத்தாண்டவம்பாருங்கடி. 35

விதியெழுத்தைக்கிழித்தாச்சு - முன்
விட்டகுறைவந்துதொட்டாச்சு
மதியமிர்தமுண்டாச்சுதென்று
வாழ்த்திக்கும்மியடியுங்கடி. 36

கோவிலுக்குள்ளேயனேகமுண்டு - அந்தக்
குறிப்பறிந்ததைச்சொல்லுவீரே
தேவரகசியம்பள்ளியறைவந்து
தெளிந்துக்கும்மியடியுங்கடி. 37

சண்டேஸ்வரர்தம்மைப்பாருங்கடி - அந்தச்
சந்நிதிக்கேகைகொட்டுங்கடி
மண்டலம்புகழுமழகர்வாசலில்
வாழிபாடுவோம்வாருங்கடி. 38

வீட்டுக்கவலைகள்விட்டொழியார் - மெத்த
வீம்புகள்பேசியேவீணலைப்பார்
பாட்டைப்படித்தாலுஞ்சிதம்பரம்வந்த
பலனதல்லவோபாருங்கடி. 39

புத்திரபாக்கியமெத்தவுண்டாம் - பசும்
பொன்னுந்தனிப்பூஷணமுமுண்டாம்
பத்தியுடன்கோபாலகிருஷ்ணனைப்
பணியக்கும்மியடியுங்கடி. 40

சிதம்பரக்கும்மி-முற்றிற்று.



